ஜனவரி 2005 Rs. 12 /-



# அம்புலிமாமா

ஜீ-மேன்
சாகஸங்களை இந்த இதழில்
படித்து மகிழுங்கள்

G-man

புத்தாண்டு வாழ்த்துக்கள்

Orissa
The Soul of India

# சிலிகா

## பரவசத்தின் நுழைவாயில்

நீலத்துகில் உடுத்திய தேவதை போல் நீள் விசும்பில் நீண்டு படர்ந்துள்ள சிலிகா ஏரி இந்தியாவின் மிகப்பெரிய உவர் நீர் ஏரியாகும். கழுத்தில் புனைந்துள்ள தங்க ஆபரணத்தில் ஆங்காங்கே பச்சைக் கற்கள் பதித்ததுபோல் சிலிகாவைச் சுற்றியுள்ள மலைகளும் ஏரியின் நடுநடுவே அமைந்துள்ள பச்சைப் பசேலென்ற அழகிய சிறு தீவுகளும் சிலிகாவின் அழகுக்கு மேலும் அணி செய்கின்றன. இந்த அழகில் மயங்கி சிலிகாவை நாடி உலகின் பல பகுதிகளிலிருந்து வரும் வண்ணப் பறவைகள் ஏராளம். பளிங்கு போன்ற நீரில் துள்ளிக் குதித்து விளையாடும் கணக்கற்ற டால்ஃபின்களுக்கு சிலிகா ஓர் இனிய இருப்பிடம். பரந்து விரிந்த சிலிகாவின் நீர்ப்பரப்பும், அதனூடே ஊர்ந்து செல்லும் படகுகளும், சுற்றிச் சூழ்ந்துள்ள வண்ணப் பறவைகளும் சிலிகாவை நாடி வரும் பயணிகளின் கண்களுக்கு ஒரு தெவிட்டாத விருந்து.





ஒ.டி.டி.சி-யின் விசேஷ சுற்றுலாப் பயணத் திட்டங்கள்

| | | |
|---|---|---|
| பேக்கேஜ் -1 | : | பூரி-கொனார்க்-புவனேஸ்வர்-சிலிகா (சாத்பதா): 2 இரவுகளும், 3 பகலும் |
| கட்டணம் | : | குளிர்சாதனத் தங்குமிட வசதியும், போக்குவரத்தும் சேர்த்து நபருக்கு ரூபாய் 2,399. குளிர்சாதனமற்றத் தங்குமிட வசதியும், போக்குவரத்தும் சேர்த்து நபருக்கு ரூபாய் 1,799. |
| பேக்கேஜ் -2 | : | வனவிலங்கு சரணாலய விசேஷப் பயணம் : சாந்திப்பூர் கடற்பயணம் - சிமிலிபால் - பித்தார்கணிகா வனவிலங்கு சரணாலயம் : 3 இரவுகளும் 4 பகலும் |
| கட்டணம் | : | குளிர்சாதனத் தங்குமிட வசதியும், போக்குவரத்தும் சேர்த்து (லுலுங்கைத் தவிர்த்து) நபருக்கு ரூபாய் 3 ,299. குளிர்சாதனமற்றத் தங்குமிட வசதியும், போக்குவரத்தும் சேர்த்து நபருக்கு ரூபாய் 2,399. |
| பேக்கேஜ் -3 | : | சிலிகா தர்ஷன் ஸ்பெஷல் : சிலிகாவிலுள்ள பார்குல் - பார்குலிலிருந்து சாத்பதா வரை ஏரியில் பயணம் (முக்கியமாகக் கண்டு மகிழ வேண்டியவை : காலிஜை - நலபான் - ராஜ்ஹன்ஸ் - டால்ஃபின் - சி மௌண்ட்) பூரி - கொனார்க் : 2 இரவுகளும், 3 பகலும் |
| கட்டணம் | : | குளிர்சாதனத் தங்குமிட வசதியும், போக்குவரத்தும் சேர்த்து நபருக்கு ரூபாய் 2,799. குளிர்சாதனமற்றத் தங்குமிட வசதியும், போக்குவரத்தும் சேர்த்து நபருக்கு ரூபாய் 2,099. |

மேற்கூறியப் பயண திட்டங்களில் குளிர்சாதன வசதி உள்ள/வசதியற்ற தங்குமிடங்களில் இருவர் சேர்ந்து தங்குமாறு இடவசதியும் உணவும் (காலை உணவு, மதிய உணவு, மாலையில் தேநீர் மற்றும் இரவு உணவு), பயணத்திற்கு குளிர்சாதன வசதியுள்ள/வசதியற்ற டாட்டா சுமோ வசதிகளும் அளிக்கப்படும். இவற்றைத் தவிர, சிலிகா ஏரி, பித்தார்கணிகா ஆகிய இடங்களின் நுழைவுக் கட்டணமும் (கேமரா, விடியோ கேமராக் கட்டணங்களைத் தவிர) மேற்கூறியப் பயணத் திட்டங்களில் அடங்கும்.

விதிமுறைகள்: மேற்கூறியப் பயணத் திட்டங்களில் சேர்ந்து பயன் பெற, குறைந்தது 8 நபர்கள் தேவை. கட்டணங்கள் மாறுதலுக்கு உட்பட்டவை.

மேலும் விவரங்களுக்குத் தொடர்பு கொள்ளவும்:

மேனேஜர் (மார்க்கெட்டிங்), ஒ.டி.டி.சி லிமிடெட் (தலைமை அலுவலகம்), பந்தநிவாஸ் (ஓல்ட் பிளாக்), லெவிஸ் ரோடு, புவனேஸ்வர்-751014. தொலைபேசி : 0674-2432382.



**For more information contact:** Director, Tourism, Paryatan Bhavan, Bhubaneswar-751014, Orissa, India
Tel: (0674) 2432177, Fax: (0674) 2430887, e.mail:ortour@sancharnet.in, website:www.orissatourism.gov.in
Tourist Offices at: **Chennai:** Tamilnadu Tourism Complex, Ground Floor, Near Kalaivanar Arangam, Wallajah Road, Chennai - 600002, Ph: (044) 25360891, **Kolkata:** Utkal Bhawan 55, Lenin Sarani, Pin-700013, Tel: (003) 22443653, **New Delhi:** Utkalika, B/4 Baba Kharak Singh Marg, Pin - 110001, Telefax (011) 23364580

A NEW YEAR GIFT

# FOR OUR SUBSCRIBERS

## OF CHANDAMAMA IN 13 LANGUAGES

A gift that will reach your dear one month after month for a whole year!

Junior CHANDAMAMA

WITH SUBSTANTIAL SAVING

ONLY
**Rs. 100**
as against Rs. 144**
( This offer is for only a limited period )

*Fill up the coupon below*




## GIFT SUBSCRIPTION FOR JUNIOR CHANDAMAMA

☐ I/My child/Ward is a subscriber of Chandamama,
Subscription No. .................... Language ................

For subscription number, see address label on envelope

I wish to give a one-year GIFT subscription for JUNIOR CHANDAMAMA to :

Name : ................................................................................................. (child / grown-up)

Home address : ......................................................................................................

........................................................................................... PIN CODE : ...........................

Please ATTACH the label below on the FIRST COPY. I am enclosing DD / Cheque No. ............................

on .................................................. Bank for Rs. 100 (add Rs. 50 on outstation cheques) / M.O.

Receipt No. ........................................ issued by .................................... P. O.

*Signature*

** THIS OFFER CLOSES ON JANUARY 31, 2005
* All payments in favour of Chandamama India Ltd., 82 Defence Officers Colony, Ekkaduthangal, Chennai - 600097.

This is a GIFT Subscription, with love from

..............................................................................

Town / City ..................................................................


அம்புலிமாமா மதிமுகம் : 109 ஜனவரி : 2005 புன்னகை : 01


## பொருளடக்கம்



## சிறப்புப் படைப்பாக


















SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**

*Remittances in favour of Chandmama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
**No. 82, Defence Officers Colony**
**Ekkatuthangal,**
**Chennai - 600 097**
**E-mail :**
**subscription@chandamama.org**

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.144/- புக்போஸ்டில் உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியாடரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# புத்தாண்டு உறுதிமொழி

ஒவ்வொரு குழந்தையும் 2010ஆம் ஆண்டுக்குள் பள்ளியில் பயில வேண்டும் என்பதும், பள்ளிக்குச் செல்லாத குழந்தைகளே இருக்கக்கூடாது என்பதும் நமது இந்திய அரசின் உயரிய நோக்கமாக இருந்து வருகிறது. ஆனால் இந்தியா முழுவதுமாக இயங்கிக் கொண்டிருக்கும் பள்ளிகளில் பயிலும் மாணவ, மாணவிகளைப் பற்றி ஆராய்ந்தபோது தெரிய வந்த தகவல்கள் நம்மை அதிர்ச்சியில் ஆழ்த்தாவிடினும் நிச்சயமாகக் கவலைப்படச் செய்கின்றன. திட்டக்குழுவுக்காக மும்பையைச் சேர்ந்த பிரதாம் என்பவர் இந்தியாவிலுள்ள சுமார் 30 மாவட்டங்களிலுள்ள ஆரம்பப் பள்ளிகளில் பயிலும் மாணவர்களைப் பற்றி நிகழ்த்திய கணிப்பின்படி, பள்ளியில் சேரும் சிறுமிகளில் 7 முதல் 10 வயது வரையும், 11 முதல் 14 வயது வரையும் உள்ளவர்களில் ஆறில் ஒரு பங்கினர், பள்ளியில் சேர்ந்த சில மாதங்களிலேயே படிப்பை நிறுத்தி விடுகின்றனர்களாம்.

பெரும்பாலான குழந்தைகளுக்கு ஒரு வாக்கியம் கூட எழுதத் தெரியவில்லை. அலகாபாத், லக்னோ மாவட்டங்களில் உள்ள அரசுப் பள்ளிகளில் 7 முதல் 10 வயதான மாணவர்களில் 80 சதவீதம் பேருக்கு இன்னமும் படிக்கக்கூடத் தெரியவில்லை. தனியார் பள்ளிகளின் நிலை ஓரளவிற்குப் பரவாயில்லை. சுகாதாரத் துறையில் பல சாதனைகளை புரிந்துள்ள நம்மால், ஏன் அறியாமை இருளை மட்டும் முற்றுமாய் அகற்ற முடியவில்லை? 2020ஆம் ஆண்டுக்குள் உலக அரங்கில் இந்தியா ஒரு பெரிய சக்தியாக உருவெடுக்கப் போவதாகக் கனவு காண்கிறோம். அந்தக் கனவு நனவாக வேண்டுமானால் இப்போதிருந்தே இந்திய குடிமக்கள் அனைவரையும் பட்டதாரியாக ஆக்க முடியாவிடினும், எழுதப்படிக்கத் தெரிந்தவர்களாக ஆக்கவாவது முயற்சிப்போம்.

ஆசிரியர் : **விஸ்வம்**

Visit us at : http://www.chandamama.org



# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி (ஜூலை)

## தேர்ந்தெடுக்கப் பட்ட சிறந்த கதை



அந்த ஜமீன்தாரைப் பரிசோதித்த உடனேயே அவருக்கு உடலில் நோய் எதுவும் இல்லை என்று மருத்துவருக்குத் தெரிந்து விட்டது. இருந்தாலும் ஒவ்வொரு நாளும் அவர் ஜமீன்தாரை சந்தித்து அவருடைய நோயின் அடையாளங்களைப் பற்றி மிகுந்த அக்கறையுடன் கேட்டு வந்தார். எத்தனை முறை பரிசோதித்த போதிலும், ஜமீன்தாருக்கு உடலில் எதுவும் நோயிருப்பதற்கான அறிகுறிகளே தென்படவில்லை. ஆகவே ஜமீன்தாருக்கு மருந்து எதுவும் தேவையில்லை என்ற எண்ணத்துடன், மருந்து ஏதும் கொடுக்காமலே காலம் கடத்தினார். ஜமீன்தாருடன் மட்டுமின்றி அவருடைய உதவியாளர்களிடமும் ஜமீன்தாரைப் பற்றி விசாரிக்கையில் அவருக்குப் பண விஷயமாக ஏதோ பிரச்சினைகள் உள்ளன என்றும் அதுவே அவர் மனதை பாதித்துள்ளது என்றும் அறிந்தார்.

மன உளைச்சலைத்தான் ஜமீன்தார் நோய் என்று எண்ணி தனக்குப் பலவிதமான நோய்கள் இருப்பதாக தானே முடிவு செய்து மருத்துவரை அடிக்கடி அழைத்தார். சில மாதங்கள் சென்றதும் அவர் பணப் பிரச்சினைகள் சரியாகிவிட, ஜமீன்தாருடைய மன உளைச்சல் நீங்க அவர் தன் உடலை இத்தனை நாள் வாட்டிய நோய்கள் அகன்று விட்டன என்று நினைத்தார். ஆறு மாதங்கள் கழித்து ஜமீன்தாரை மீண்டும் மருத்துவர் சந்தித்த போது மருத்துவர் அவரிடம் உண்மைகளை எடுத்துக் கூற மருத்துவரின் மதி நுட்பத்தைப் பாராட்டிய ஜமீன்தார் அவருக்குப் பரிசு அளித்தார்.

**ஆர்.தீபிகா,** (6ம் வகுப்பு) த/பெ. எம்.ரவி.
நம்பர் 16, சாரதாம்பாள் தெரு, வெங்கடேஷ் நகர், விருகம்பாக்கம்,
சென்னை- 92. தமிழ்நாடு.

# சித்தார்த்தனின் சாமர்த்தியம்

ஏலகிரியில் சுவாமிநாதன் என்பவர் வசித்து வந்தார். அவருக்கு சித்தார்த்தன் என்ற ஆறு வயது மகனும் பவானி என்ற மூன்று வயது மகளும் இருந்தனர். சித்தார்த்தன் படிப்பில் மிகக் கெட்டிக்காரனாக விளங்கினான். அதுவும் குறிப்பாக கணிதப் பாடத்தில் நல்லத் தேர்ச்சி பெற்றிருந்தான்.

ஒருநாள் பக்கத்து ஊரிலிருந்து அவனுடைய மாமா வந்திருந்தார். ஒரு பை நிறைய கடலை உருண்டைகளைக் கொண்டு வந்திருந்தார். சித்தார்த்தனின் புத்திசாலித்தனத்தைப் பற்றிக் கேள்விபட்டிருந்த அவர் அதை சோதிக்க விரும்பி, பையினுள் கையை விட்டு பத்து கடலை உருண்டைகளை வெளியில் எடுத்தார். அவற்றைக் கொடுத்து ''சித்தார்த்தா இவற்றை எடுத்துக் கொள். இவற்றில் பாதி உன் தங்கைக்குக் கொடுத்து விடு. பிறகு உன்னிடம் மீதி எவ்வளவு இருக்கும் என்று சொல்?'' என்றார்.

''ஏழு இருக்கும் மாமா'' என்றான் சித்தார்த்தன்.

'என்ன இந்த சாதாரணக்கணக்கு கூட இவனுக்குப் போடத் தெரியவில்லையே' என்று எண்ணிக் கொண்டு மாமா ''நீ என்னுடைய கேள்வியை சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. பத்து உருண்டைகளில் பாதி உன் தங்கைக்குக் கொடுத்தால் மீதி உன்னிடம் எத்தனை இருக்கும்?'' என்று கேட்டார்.

''அது தான் சொன்னேனே மாமா! ஏழு இருக்கும்'' என்றான் சித்தார்த்தன். ''உனக்கு கணிதமே தெரியவில்லையே'' என்ற மாமாவிடம் ''கணிதம் எனக்கு நன்றாகத் தெரியும் மாமா. ஆனால் என் தங்கைக்குத் தெரியாதே!'' என்றான் சித்தார்த்தன்.

மாமாவின் முகம் தொங்கி விட்டது. 'இவனுக்கு படிப்பு மட்டும் தான் தெரியும் என நினைத்தேன். ஆனால் மகா சாமர்த்தியசாலியாகவும் இருக்கிறானே' என்று மாமா தனக்குள் சொல்லிக் கொண்டார்.

-ராம் குமார்





# நகராட்சித் தலைவர்

விசால சாம்ராஜ்யத்தில் நகரங்கள் எத்தனையோ இருந்தாலும் மகா நகரம் மற்ற நகரங்களைக் காட்டிலும் மிகச் சிறப்பாக விளங்கியது. ராஜ்யத்தின் மற்ற இடங்களில் பஞ்சம் தலை விரித்தாடும் சமயங் களில் கூட மகாநகரம் செழிப்பாக இருந்தது. மகாநகரத்தின் நகராட்சித் தலைவரான சங்கரனுடைய சிறப்பான நிர்வாகமே அந்த நகரத்தின் சிறப்புக்குக் காரணம் என்று பெரும்பாலோர் கருதினர்.

கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கிய சங்கரன், மிக எளிய வாழ்க்கையே வாழ்ந்து வந்தான். தனக்கென்று ஒதுக்கப்பட்ட மாளிகையைப் புறக்கணித்து ஒரு சாதாரண வீட்டில் வசித்து வந்தான். நிர்வாக நேரம் தவிர, மற்ற நேரங்களில் எல்லாம் பொது மக்களுடன் நெருக்கமாகப் பழகி, அவர்களது குறைகளை நேரில் கேட்டறிந்து அவற்றுக்கு தீர்வும் அவ்வப்போது கண்டதால், பொது மக்கள் மகிழ்ச்சியுடன் இருந்தனர்.

அனைத்து மக்களின் அன்புக்குப் பாத்திரமாக இருந்த சங்கரனைப் பிடிக்காத ஒரு நபரும் அந்த நகரத்தில் உண்டு. அவன்தான் ராஜப்பிரியன். அவன் மன்னருக்கு தூரத்து உறவினன். அவன் மனைவி ராணிப் பிரியா, பட்டத்தரசியின் தூரத்து உறவினள். ராஜப்பிரியனிடம் அளப்பரிய செல்வம் இருந்தும், சங்கரனைப் போல் புகழை அவனால் சம்பாதிக்க முடியவில்லை. இதனால் ராஜப்பிரியனுக்கு சங்கரன் மீது பொறாமை ஏற்பட்டது.

ஒருநாள் ராஜப்பிரியன் தன் மனைவியிடம் ''புராணக்கதைகளில் வரும் யயாதி, மகாபலி ஆகியோர் சக்கரவர்த்தியாக இருந்ததனால் மட்டுமே புகழ் பெற்றனர். ஆகவே ஒரு மனிதனுக்குக் கிடைக்கும் புகழ் அவன் பதவியினால்தான் என்பது என் அபிப்பிராயம்'' என்றான்.

-அமுதா-

அதைத் தொடர்ந்து, ''பதவி இல்லாமல், தனது சாதனைகளாலும் புகழ் பெறுபவர் உள்ளனர். ஆனால் அப்படிப்பட்ட சாதனைகளைப் புரியும் வல்லமை நமக்கு இல்லை. நம்மைப் போன்ற மனிதர்களுக்குப் புகழ் வர வேண்டுமானால் நம் முடைய பதவியானால்தான் வரும். ஆகவே ராணிப்பிரியா, நான் சொல்வதைக் கேள். நாம் இருவரும் மன்னரிடம் சென்று முறை இடுவோம். சங்கரனுக்கு பதிலாக என்னை அவர் இந்த நகராட்சித் தலைவராக நியமனம் செய்தால் புகழ் தானே என்னை நாடி வரும்'' என்றான்.

இருவரும் மன்னரை சந்தித்துத் தங்கள் கோரிக்கையை வெளி இட்டனர். சற்று நேரம் யோசித்த மன்னர், ''நமது ராஜ்யத்திலேயே மகாநகரம் ஒரு உதாரண நகரமாக விளங்குகிறது. அதற்குக் காரணமே சங்கரனின் நிர்வாகத் திறமை என்று பலரும் கருதுகின்றனர். அப்படி இருக்க, அவனை எப்படி என்னால் அந்தப் பதவியிலிருந்து அகற்ற முடியும்?'' என்று கேட்டார்.

அதற்கு ராஜப்பிரியன், ''அரசே! மகாநகரத்தின் சிறப்புக்குக் காரணம் நிச்சயமாக சங்கரன் இல்லை. மக்கள் கண்மூடித்தனமாக அவனுக்குப் புகழ்மாலைகள் சூட்டுகின்றனர். இப்போதே சிலர் உங்களுக்கு பதிலாக சங்கரன் ராஜாவானால் விசால ராஜ்யமே செழிப்பாக இருக்கும் என்று கூட சொல்கின்றனர்'' என்று



கூறி மன்னரையே திடுக்கிட வைத்து விட்டான்.

ராஜப்பிரியனது வார்த்தைகளால் சஞ்சலம் அடைந்த மன்னர் நன்கு யோசித்த பின் ஒரு முடிவுக்கு வந்தார். உடனே தனது தூதனை மகா நகரத்துக்கு அனுப்பினார். அந்த தூதன் சங்கரனிடம், ''உங்கள் சிறப்பான நிர்வாகத்தினால் மகா நகரம் செழிப்பாக இருப்பதைக் கண்ட மன்னர், உங்கள் திறமை முழு ராஜ்யத்திற்கும் பயன்பட வேண்டும் என்று கருதுகிறார். ஆகவே நீங்கள் தலைநகரத்துக்கு வந்து மன்னரது ஆலோசகராகப் பணியாற்ற வேண்டும். உங்கள் இடத்தில் ராஜப் பிரியன் நகராட்சித் தலைவர் ஆவார்'' என்று செய்தி சொன்னான்.

இவ்வாறு ராஜப்பிரியன் அவனுடைய விருப்பப்படியே மகா



நகரத்தின் நிர்வாகியாகப் பொறுப் பேற்க, சங்கரன் மன்னரது ஆலோச கராகப் பணிபுரியத் தொடங்கினான்.

ராஜப்பிரியன் ஆட்சிப் பொறுப்பை ஏற்றதும், எப்போதும் தன் புகழ் பாடக்கூடிய நபர்களைப் பொறுக்கியெடுத்துத் தன் பணி யாளர்களாக நியமித்துக் கொண்டான். தன் நீண்ட நாள் கனவு பலித்ததை எண்ணி ராஜப்பிரியன் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினான்.

சங்கரன் தனது புதிய பணியில் ஆர்வத்துடன் ஈடுபட்டு, மன்னருக்கு, அவருடைய பிரச்சினைகள் அனைத் திலும் பங்கு கொண்டு, உதவி செய்து ஆக்கப்பூர்வமான சாதனைகள் படைத்தான். சங்கரனது மதிநுட்ப மான ஆலோசனைகளால் விசால ராஜ்யத்தின் மேன்மை ஓங்கியது.

இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு மகாநகரத்தில் பயங்கரப் பஞ்சம் உண்டாயிற்று. அந்த ராஜ்யத்தின் மற்ற பகுதிகள் சீராக இருக்க, எப்போதுமே மிகவும் செழிப்புடன் இருக்கும் மகாநகரம் ஏன் இப்படி ஆயிற்று என்று அனைவரும் ஆச்சரியப்பட்டனர். மன்னரும் சங்கரனை அழைத்து மகாநகரத்துக்கு நேரில் சென்று நிலைமையை அறிய வேண்டி அனுப்பினார். அப்போது மந்திரிகள் மன்னரிடம், ''அரசே! சங்கரனது பொறுப்பில் இருந்தவரை செழிப்புடன் இருந்த நகரம், இரண்டு ஆண்டுகளில் இவ்வாறு சீர்கேடு அடைந்தது ஏன் என்று யோசிக்க வேண்டும். அதுவும் சங்கரனது ஆலோசனைகளின் பயனை நாம் நாடு முழுதும் கண்கூடாகப் பார்க்கிறோம். சங்கரன் அங்கிருந்து அகன்றவுடன், மகாநகரமே சீர்கேடு அடைந்து விட்டது'' என்று விவாதித்து ராஜப் பிரியனின் நிர்வாகத்தைப் பற்றி மறைமுகமாகக் குறை கூறினர்.

ஆனால் மன்னர் அதை ஒப்புக் கொள்ளவில்லை. ''நாடு முழுதும் சங்கரனது ஆலோசனைகளால் அபிவிருத்தி அடைந்துள்ளது என்கிறீர்கள். மகாநகரமும் இந்த நாட்டின் ஒரு பகுதிதானே! அங்கு மட்டும் ஏன் சங்கரனது சக்தி செயற்படவில்லை?'' என்று மன்னர் சந்தேகம் எழுப்பினார்.

''அரசே, சங்கரனால் ஆலோசனை கள் மட்டுமே கூற முடியும். ஆனால் அவற்றை ஒழுங்காகப் பின்பற்றுவது

அந்த நிர்வாகியின் கையில்தான் உள்ளது. ஆகவே நீங்கள் ராஜப் பிரியனுடைய நடவடிக்கைகளை நேரில் சென்று கண்டறிய வேண்டும்'' என்றனர் மந்திரிகள்.

மந்திரிகளின் கூற்றின் நியாயத்தை உணர்ந்த மன்னர் தானே நேரில் மகா நகரம் சென்றார். மன்னரை ராஜப் பிரியன் தடபுடலாக வரவேற்றான். மன்னர் சங்கரனையும் தன்னிடம் அழைத்தார். பிறகு இருவருடனும் கலந்து ஆலோசனை செய்தார்.

சங்கரன் மன்னரிடம் ''அரசே! நீங்கள் கூறியவாறு இங்குள்ள நிலைமையை நேரில் கண்டறிந்தேன். மகாநகரம் தற்போது அடைந்துள்ள சீர்கேட்டிற்கு இந்த இரண்டு ஆண்டுகளாக எதையும் திட்டமிட்டு செயற்படாமல், நேரத்தை வீணாக் கியதும் சட்டம், ஒழுங்கு, அமைதியை நிலைநாட்டத் தவறி யதும் தான் காரணங்கள்'' என்றான். உடனே ராஜப்பிரியன் ''மகாராஜா! சங்கரன் கூறுவது எல்லாம் பொய். இப்போதுள்ள நிலைமை தெய்வச் செயலினால் நடந்தது'' என்றான்.

''உங்கள் இருவரில் யாருடைய கருத்தை நான் ஏற்பது?'' என்று கேட்டார் மன்னர். அதற்கு சங்கரன், ''அரசே! இந்த நிலைமைக்கு ராஜப்பிரியனே காரணம். பொது மக்களுடைய குறைகளை இவர் அறிய முயற்சிக்கவே இல்லை. நிர்வாகத்தையும் சீராக கவனிக்கவே இல்லை'' என்று குற்றம் சாட்டினான்.

''இல்லை மகாராஜா! நான் ஏழை



மக்களுடன் மிகவும் நெருக்கமாக இருந்து வந்தேன். வேண்டுமானால் உங்களுடன் அந்த ஏழை மக்களை நான் சந்திக்கத் தயார். அவர்கள் கூறுவதைக் கேட்டு நீங்கள் தீர்மானம் செய்யுங்கள்'' என்றான் ராஜப் பிரியன்.

''நீ சொல்வது சரி. மாறுவேட மணிந்து நான் உன்னுடன் வருகிறேன். பிறகு சங்கரனுடன் செல்வேன். ஏழை மக்கள் என்ன சொல்கிறார்கள் என்று பார்ப்போம்'' என்றார் மன்னர்.

அதன்படி மாறுவேடமணிந்த மன்னரும் ராஜப்பிரியனும் பொது மக்களை நாடிச் சென்றனர். முதலில் அவர்கள் ஒரு வியாபாரியை சந்தித்தனர். அந்த வியாபாரியின் வீட்டில் திருட்டுப் போயிருந்தது. அவனும் அவனுடைய மனைவியும்

புதல்வர்களும் ராஜப்பிரியனைக் கண்டதும் தங்களுடைய களவு போன பொருட்களைப் பற்றி முறையிட்டு கண்ணீர் வடித்தனர். ராஜப்பிரியனும் அவர்களுடன் சேர்ந்து அழுதான்.

அவர்களை விட்டு வந்ததும் ராஜப் பிரியன் ''பார்த்தீர்களா அரசே! அவர்களுடைய பரிதவிப்பைக்கண்டு நான் எவ்வாறு உருகினேன்? இதிலிருந்தே நான் மக்களுடன் எவ்வளவு நெருக்கமாக இருந்தேன் என்று தெரிகிறதல்லவா?'' என்றான். இதுபோல் இன்னும் இரண்டு வியாபாரிகள் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த சிலர், பல ஏழைகள் ஆகியவர்களை நேரில் கண்டனர். எல்லா இடங்களிலேயும் ஒரே மாதிரியான நிகழ்ச்சிகள் நடந்தன.

பிறகு மன்னர் சங்கரனுடன் சேர்ந்து வேறு சில மக்களை சந்தித்தார். ஆனால் சங்கரனின் அணுகுமுறை வேறுபட்டு இருந்தது. அவர்களுடைய துன்பங்களைக் கேட்டபின், மேலும் பல கேள்விகளைக் கேட்டு சூழ்நிலையை விவரமாகத் தெரிந்து கொண்ட பின், அடுத்து செய்ய வேண்டியதைப் பற்றியும் அவர்களுக்கு எடுத்துரைத்தான்.

மாளிகை திரும்பியவுடன் மன்னர் சங்கரனிடம் ''ராஜப்பிரியன் போல மனம் உருகாமல் உன்னுடைய அணுகுமுறை வேறாக இருக்கிறதே'' என்றார். உடனே சங்கரன் ''அரசே! ராஜப்பிரியன் போல் கூடவே சேர்ந்து கண்ணீர் வடிப்பதால் என்ன பயன்? அவர்களுடைய பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பது தான் நம் கடமை. அந்த பிரச்சினைகள் யாரால், ஏன் எவ்வாறு ஏற்பட்டது என்று ஆராய்ந்து மீண்டும் வராமல் இருக்கச் செய்ய வேண்டும். அதைத்தான் நான் முறையாகச் செய்தேன்'' என்றான்.

மன்னரின் சந்தேகம் முற்றிலும் தீர்ந்து அவர் தெளிவு பெற்றார். உடனே சங்கரனை மீண்டும் மகா நகரத்தின் நகராட்சித் தலைவராக மாற்றினார்.





# மாய மந்திரவாதி

## 14

*(மாய மந்திரவாதியும், காளிவர்மனும் மாயக்குரங்கைப் பிடிக்க கோட்டையினுள்ளே நுழைய விரும்பினார்கள். கரடி கோட்டைக்குள் நடந்து கொண்டிருக்கும் விஷயங்களைப் பற்றிய தகவலை அறிவித்தது. மன்னன் ஜீதகேதுவின் மந்திரியான ஜீவகுப்தன் தனது படையின் ஒரு பகுதியை காளிவர்மனுடன் அனுப்பி வைத்தான். இதற்குள் கொள்ளைக்கார நாகமல்லனும், அவனுடைய ஆட்களும் கோட்டைக்கதவுகளுக்குத் தீ வைத்து விட்டனர். அதன் பிறகு...)*

**கோ**ட்டைக் கதவுகள் எரிந்து சாம்பலாயின. தும்பிக்கையறுந்த யானையின் மீது ஏறி அமர்ந்த கரடி காளிவர்மனை நோக்கி, ''தலைவரே, நாம் இப்போது கோட்டைக்குள் நுழையலாம், வாருங்கள். அந்தக் குரங்கை எப்படியாவது பிடித்து விடுவோம்'' என்றது உற்சாகத்துடன். பிறகு நாகமல்லனையும் அவனின் ஆட்களையும் தங்களுடன் வரும் படி அழைக்க, நாகமல்லன் ''இனிமேல் எங்களுக்கு என்ன வேலை இருக்கிறது? நாங்கள் மீண்டும் காட்டுக்குச் சென்று எங்கள் வேலையைப் பார்க்கிறோம்'' என்றான்.

இந்த வார்த்தைகளைக் கேட்ட காளிவர்மன் நாகமல்லனை நோக்கிக் கோபத்துடன் ''அடேய் கொள்ளைக் காரா! கடைசியில் உன் புத்தியைக்



காட்டி விட்டாயா? காட்டுப் பாதையில் செல்லும் அப்பாவி மக்களிடம் வீரத்தைக் காட்டும் நீ, நிஜமான யுத்தம் என்றதும் பயந்து போய் ஏன் கோழையைப் போல் பின் வாங்குகிறாய்?'' என்று இகழ்ச்சி யாகக் கூறினான்.

அதற்கு நாகமல்லன், ''நான் ஒரு பிறவித் திருடன். காட்டு வழியே செல்லும் பயணிகளைக் கொள்ளை யடித்து என் வயிற்றை நிரப்புகிறேன் என்பது உண்மைதான். எனக்குத் தெரிந்த தொழில் அது ஒன்றுதான். மற்றபடி துன்முகனோ, பூபதியோ இவர்களில் ஒருவர் சண்டையில் வெற்றி அடைவதால் எனக்கு என்ன லாபம்?'' என்றான்.

நாகமல்லனின் உள்நோக்கத்தைப் புரிந்து கொண்ட மந்திரவாதி தன்னுடைய வாளை உருவி நாக மல்லன் தோள் மீது வைத்து, ''நாகமல்லா, இந்த வாளுக்கு மந்திர சக்தி இருந்தால், உன்னை இந்நேரம் ஒரு ஓநாயாக மாற்றியிருப்பேன். ஆனால் என் மந்திரக்கோலை அந்தக் குரங்கு திருடிக் கொண்டு விட்டது. ஆனால் இந்த வாளினால் உன் உயிரைக் குடிக்க எனக்கு அதிக நேரம் ஆகாது. ஒன்றைப் புரிந்து கொள். இந்தப் போரில் பூபதி வெற்றி அடைந்தால் உன்னை அவன் காட்டு மிருகத்தைப் போல் வேட்டையாடி அழித்து விடுவான். துன்முகன் உயிர் பிழைப்பதில்தான் உன் எதிர்காலம் அடங்கியுள்ளது'' என்று கூறினான். அதைக் கேட்டதும் நாகமல்லனுக்கும் துன்முகனைக் காப்பாற்றுவதில் உள்ள நியாயம் புரிந்தது. பிறகு ஒரு தீர்மானத்துக்கு வந்தவனாக தனது ஆட்களை நோக்கி ''மந்திரவாதியார் சொல்வது போல் நடப்போம். துன்முகன் வெற்றி பெற்றால் அவனிடமே பணிபுரியும் வாய்ப்பு கிடைக்கலாம். இந்தத் திருட்டுத் தொழிலையே விட்டு விடலாம்'' என்றான். உடனே, ''துன்முக ராஜா வாழ்க'' என்று கூவிக் கொண்டே, நாகமல்லனுடைய ஆட்கள் கோட்டைக்குள் காளிவர்மனுடனும் மந்திரவாதியுடனும் செல்லத் தயாராயினர்.

அப்போது மந்திரவாதி ''நாம் வெகு சிலரே இருக்கின்றோம். நமது முக்கிய வேலை அந்தக் குரங்கைப் பிடித்து அதனிடமிருந்து என் மந்திரக் கோலைக் கைப்பற்றுவதே. அத்துடன் துன்முகனையும் காப்பாற்றியாக

வேண்டும். இவற்றை மனதில் இருத்தி எத்தகைய எதிர்ப்புகள் நேரிடினும் அதை நேர் கொண்டு வெல்வோம்'' என்று அறிவித்தான் இதனிடையே திடீரென்று காளிவர் மனுக்கு ஒரு சந்தேகம் தோன்ற ''அது சரி இந்த ராட்சசன் உக்கிரதண்டன் எங்கே சென்றான்?'' என்று வினவினான். அப்போதுதான் அனை வரும் உக்கிரதண்டன் இவர்களுடன் சேராமல் தன் யானையின் தும்பிக்கையைப் பற்றிக் கொண்டு மன்னன் ஜீதகேதுவை நோக்கிச் செல்வதைக் கண்டனர்.

அதைக் கண்டு அதிர்ச்சியடைந்த காளிவர்மன் மந்திரவாதியை நோக்கி, ''குருவே! உக்கிரதண்டன் மன்னன் ஜீதகேதுவுடன் சேர்ந்து கொள்ளப் போகிறான் போல் தோன்றுகிறதே!'' என்று கூற, அதை மறுத்த மந்திரவாதி ''அப்படியெல்லாம் இருக்காது. எதற்கும் நீ சென்று அவனிடம் கேட்டு வா'' என்று காளிவர்மனிடம் கூறினான்.

கரடியும் துன்முகனின் வீரர்களை நோக்கி, ''அந்த உக்கிரதண்டன் நம்புவதற்கில்லை. நீங்கள் காளிவர் மனுடன், அவருக்குப் பாதுகாப்பாகச் செல்லுங்கள்'' என்றான்.

தன்னை நோக்கி வரும் காளிவர் மனையும், அவனைத் தொடர்ந்து வரும் துன்முகனின் வீரர்களையும் கண்ட உக்கிரதண்டன் அவர்களை நோக்கித் திரும்பி நின்று கொண்டான்.

''உக்கிரதண்டா, நீ என்ன செய்கிறாய்? நீ எங்களுடன் சேர்ந்து



துன்முகனைக் காப்பாற்றுவாய் என்றல்லவா நினைத்தோம்?'' என்று கேட்டான் காளிவர்மன்.

''காளிவர்மா, துன்முகன் இன்னமும் உயிருடன் இருப்பான் என்று நீ நம்புகிறாயா?'' என்றான் உக்கிரதண்டன்.

''அதில் என்ன சந்தேகம்? கோட்டைக்குள்ளே துன்முகனின் ஏராளமான வீரர்கள் இருப்பது உனக்குத் தெரியாதா? பூபதியால் அவ்வளவு சுலபமாக துன்முகனைக் கொல்ல முடியுமா?'' என்று வரிசையாகக் கேள்விகள் கேட்டான் காளிவர்மன்.

''காளிவர்மா, நீ ஏன் என்னுடன் பேசி நேரத்தை கடத்துகிறாய்? துன்முகனைக் காப்பாற்றுவதற்கு கோட்டைக்குள் உடனே நுழைவாய்'' என்றான் உக்கிரதண்டன். அதற்கு காளிவர்மன் ''நாங்கள் கோட்டைக்குள்



கட்டாயம் செல்லப் போகிறோம். ஆனால் நீ ஏன் எங்களுடன் சேராமல் ஜீதகேதுவை நோக்கிச் செல்கிறாய்? உன்னுடைய நோக்கம் என்ன?'' என்று கேட்டான்.

உக்கிரதண்டன் தன் கதையை ஆட்டிக் கொண்டே ''நீங்கள் கோட்டைக்குள் நுழைந்தவுடன் உங்களை ஜீதகேது பின்னாலிருந்து தாக்கக் கூடும். அப்படி ஏதும் நிகழாமல் தடுப்பதற்காகவே நான் இங்கே நிற்கிறேன்'' என்றான்.

அந்த பதிலைக் கேட்டு திருப்தி அடைந்த காளிவர்மன் மறு படியும் கோட்டையை நோக்கித் திரும்பினான். பிறகு மந்திரவாதி, காளிவர்மன், கரடி, நாகமல்லன் அனைவரும் பயங்கர சத்தத்துடன் கூக்குரல் எழுப்பிக் கொண்டு கோட்டைக்குள் புயலைப் போல் நுழைந்தனர். கோட்டைக்காவலர்கள் பயந்து நடுங்கி பூபதியிடம் ஓடிச் சென்று ''மகாராஜா, அந்த மந்திர வாதி கரடியுடன் ஆவேசத்துடன் நுழைகிறார். அவர்களை எதிர்த்துப் போரிட நம்மால் முடியாது. எனவே நாம் ஓடி ஒளிந்து கொள்ளலாம்'' என்றனர்.

அதைக் கேட்டு அட்டகாசமாகச் சிரித்த பூபதி, ரத்தம் தோய்ந்த தன் வாளை நீட்டி ''அடக் கோழைகளா? துன்முகனுடைய வீரர்களில் பெரும் பாலோரை நாம் கொன்று விட்டோம். இந்த மந்திரவாதியால் நம்மை என்ன செய்துவிட முடியும்? நம்மிடம் உள்ள மாயக்குரங்கு செய்யும் மந்திர வித்தைகளுக்கு முன்னால் மந்திரக் கோல் இல்லாத மந்திரவாதியின் ஜம்பம் சாயாது'' என்று கொக்கரித் தான்.

இதற்குள் கோட்டைக்குள் நுழைந்து விட்ட காளிவர்மன் தன் எதிரே நின்று கொண்டிருந்த பூபதியை பார்த்து, ''பூபதி! ஒரு குரங்கின் உதவியுடன் எங்களை வெற்றி பெறலாம் என்றா மனப்பால் குடிக்கிறாய்? துன்முகன் எங்கே? சீக்கிரம் சொல். அவன் கையினா லேயே உன் தலையை சீவச் செய்கிறேன்'' என்றான்.

திடீரென அரண்மனையின் மேல் தளத்தில் மாயக்குரங்கு ஒரு கையில் மந்திரக்கோலுடனும், மற்றொரு கையில் ஒரு வெட்டப்பட்ட தலையுடன் தோன்றி, திசை அதிர சிரித்தது. ''காளிவர்மா! துன்முகனைத்

தேடினாய் அல்லவா? இதோபார் உன் துன்முகனின் தலை. போ, அவனது தலையற்ற உடலைத் தேடு. நீ தேடி முடிப்பதற்குள் உன் தலையும் இவ்வாறு வெட்டப்பட்டு தரையில் உருளும்'' என்று கூறி அட்டகாச மாகச் சிரித்தது.

''ஏ குரங்கே!'' என்று கோபத்தில் கத்திய மந்திரவாதி ''உன் அழிவு காலம் நெருங்கி விட்டது. மந்திரக் கோலை என்னிடமிருந்து நீ திருடி விட்டதால் உன்னை என்னால் ஒன்றும் செய்ய முடியாது என்று நினைக்காதே. உன்னையும் உன்னுடைய குருவான மித்தியா மிஸ்ரரையும் ஒழித்துக் கட்டுகிறேன். உன் குரு எங்கே?'' என்று மந்திரவாதி சீற, ''என் குரு எங்கே என்பதை உன் மந்திரசக்தியால் கண்டுபிடித்துக் கொள்ளேன், என்னிடம் ஏன் கேட்கிறாய்? உன்னுடைய குருவான பல்லுக்பாதரைக் கொல்ல இப்போது அவர் தன் வாளைத் தீட்டிக் கொண்டிருக்கிறார்'' என்று குரங்கு ஆரவாரம் செய்தது.

குரங்கின் வார்த்தைகளால் மிகவும் கோபம் அடைந்த மந்திரவாதி ''வீரர்களே, இந்தக் குரங்கு, பூபதி அவனுடைய வீரர்கள் ஆகிய அனை வரையும் பூண்டோடு அழிப்போம். வாருங்கள்'' என்று எக்காளமிட்டான்.

இவ்வாறு மந்திரவாதி சொல்லிக் கொண்டிருக்கும் போதே அவர் களுடைய அணியைச் சேர்ந்த வேட்டுவ இளைஞன் குறிபார்த்து அம்பு எய்ய, அந்த அம்பு வெட்டிய



தலையை பிடித்திருந்த குரங்கின் கையில் தைத்தது. 'கிறீச்' என்று கத்திக்கொண்டே குரங்கு தலையை கீழே போட்டுவிட, துன்முகனின் வீரர்கள் பாய்ந்து சென்று அதை எடுத்துப் பார்த்தனர். உடனே அவர்கள், ''மந்திரவாதி அவர்களே! இது எங்கள் ராஜாவின் தலை இல்லை. இந்த குரங்கு பொய் சொல்கிறது'' என்று மகிழ்ச்சியுடன் கூவினர்.

இதைப் பார்த்த கரடி உற்சாகத் துடன் துள்ளிக் குதித்து, ''வேட்டுவ இளைஞனே! பிரமாதம் மிகத் திறமையாகக் குறி தவறாமல் அம்பு எய்தாய். நாம் எல்லாரும் வீரா வேசத்துடன் இவர்களைத் தாக்கு வோம். துன்முகனைக் கண்டு பிடிப் போம். நான் கோடாலிகொண்டு இவர்களைத் தாக்குவேன்.

என்னிடமிருந்து தப்பிப் பிழைப்பவர்களை, உன் அம்பு கொண்டு தாக்கு. வெற்றி நமதே! ஹே, காலபைரவா!'' என்று கத்திக் கொண்டே, குரங்கை கோடாலியால் தாக்க முயன்றது. திடீரென்று குரங்கு எங்கோ தாவிக் குதித்து மாயமாக மறைந்து விட்டது. அப்போது காளிவர்மன் ''குருவே! முதலில் இந்த பூபதியையும் அவன் வீரர்களையும் முறியடிப்போம். துன்முகன் இங்குதான் எங்கோ ஒளிந்திருக்கிறான் என்று தோன்றுகிறது'' என்றான்.

அப்போது பூபதியின் வீரர்களின் தாக்குதலுக்குத் தப்பியோடி ஒளிந்திருந்த ஏராளமானதுன்முகனின் வீரர்கள் தங்கள் மறைவிடங்களில் இருந்து ஓடி வந்தனர். ''மந்திரவாதி அவர்களே! எங்கள் மன்னர் ஆஸ்தான சபா மண்டபத்தில் உள்ள ஒரு அறையில் ஒளிந்திருக்கிறார்'' என்றனர். ''சரி வாருங்கள், துன்முகனை அங்கிருந்து உயிருடன் மீட்போம்'' என்று சொல்லிக் கொண்டே அனைவரும் சபா மண்டபம் நோக்கி விரைந்தனர். அங்கு சென்றதும் அவர்கள் கண்ட காட்சி அவர்களை ஆச்சரியத்தில் திக்கு முக்காடச் செய்தது. சபா மண்டபத்தில் சிம்மாசனத்தில் துன்முகன் கம்பீரமாக அமர்ந்திருந்தான்.

அனைவரையும் கண்டவுடன் துன்முகன் தன் கையினை உயர்த்திக் கரடியை நோக்கி, ''கரடியாரே மறுபடியும் ஒருமுறை என்னுடைய சிங்காதனத்தில் அமர வேண்டும் என்ற என் ஆசை நிறைவேறி விட்டது. இப்போது நீ தாராளமாக என் தலையை வெட்டி உனது குருவான மந்திரவாதியிடம் சமர்ப்பிக்கலாம். நான் தயார்'' என்றான்.

உடனே கரடி மிகுந்த உற்சாகத்துடன் தன் கோடாலியை உயர்த்திப் பிடித்துக் கொண்டு துன்முகனின் தலையை வெட்டுவதற்காக அவனை நோக்கி ஓடிச் சென்றது.

(தொடரும்)





நவீன வேதாளக் கதை

# மன்னரும், திருடனும்

தன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் கீழே இறங்கி அவன் அதை சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்தது ''விக்கிரமா ஏதோ ஒரு காரணத்தால் யாரோ நீ அவமானப் படும் படி ஏதோ செய்திருக்கிறார்கள், அதில் இருந்து மீளவே நீ இவ்வாறு சிரமப்படுகிறாய் என்று தோன்றுகிறது. பிறருக்கு நன்மை செய்ய வேண்டும் என்ற நல்ல எண்ணத்துடன் செயற்படுபவர்களுக்குக் கூட சில நேரங்களில் தோல்வி ஏற்படுகின்றன. அப்படி



நன்மை செய்ய நினைத்து சங்கடத்துக்கு ஆளான பார்த்திப மன்னனின் கதையை உனக்கு இப்போது கூறுகிறேன் கவனமாகக் கேள்'' என வேதாளம் கதை சொல்லத் தொடங்கியது.

பார்த்திபன், மன்னர் சூரவர்மனின் ஒரே புதல்வன். சிறு பிராயத்தில் தயானந்த முனிவரின் குருகுலத்தில் சேர்ந்து பல ஆண்டுகள் பயின்று அனைத்து கலைகளும் கற்றுத் தேர்ந்தான். ஒருநாள் முனிவர் பார்த்திபனை அழைத்து ''பார்த்திபா, நீ ஒரு புத்திசாலியான மாணவனாகவும் நேர்மையானவனாகவும் இத்தனை ஆண்டுகள் என்னிடம் பயின்றாய். கற்க வேண்டிய அனைத்தும் நீ கற்றுக் கொண்டு விட்டாய். நீ இனி உன் ராஜ்யத்திற்குத் திரும்பலாம். கல்வி என்பது ஒருத்தனுடையக் கண்களைப் போன்றது. அந்த அறிவுக் கண்களை நன்கு பயன்படுத்தி உன் தந்தைக்குப் பிறகு ராஜ்யப் பொறுப்பை ஏற்று நீ சீராக ஆட்சி செய்ய வேண்டும். உன்னுடைய குடிமக்களின் நலனைப் பேணி பாதுகாப்பதே உன் முக்கிய பொறுப்பு. உன் கீழே பணியாற்றுவோரை முழுதும் நம்பாமல் நீயே நேராக மக்களின் குறைகளை அறிந்து கொண்டு அவற்றைத் தீர்க்க முயற்சி செய். மக்களுக்கு உதவி செய்வதே அரச லட்சணம். இத்தனை ஆண்டுகள் நீ கற்ற கல்வியின் நோக்கமே அதுதான் என்று எண்ணி செயற்படுவாய். இதுவே நீ எனக்குத் தரும் தட்சிணையாக இருக்கட்டும்'' என்று அவனை வாழ்த்தி அனுப்பினார்.

குருகுலத்தில் கல்வி பயின்று திரும்பிய தன் புதல்வனைக் கண்டு மன்னர் சூரவர்மன் பெரும் மகிழ்ச்சி அடைந்தார். ஏற்கனவே திட்டமிட்டபடி பார்த்திபனுக்கு முடி சூட்டி விட்டு சூரவர்மன் ஓய்வெடுக்கத் தொடங்கினார். பார்த்திபனும் தன் நாட்டை திறம்பட ஆண்டு வந்தான். தயானந்த முனிவரின் கூற்றுக் கிணங்க, மக்களின் குறைகளை நேரடியாகக் கண்டு தீர்த்து வந்தான். ஒரு நாள் துணி வியாபாரி போல் வேடம் தரித்து பார்த்திபன் தலைநகரை விட்டுத் தனியே கிளம்பிச் சென்றான்.

தலைநகரின் எல்லையிலிருந்த நதியைக் கடந்து ஒரு கிராமத்தை

நோக்கிச் செல்கையில் திடீரென ''காப்பாற்றுங்கள், என் பிள்ளையைக் காப்பாற்றுங்கள்'' என்று ஒரு கூக்குரல் கேட்டது. குரல் கேட்டுத் திரும்பிய பார்த்திபன் பாதை ஓரத்தில் ஓர் கிணற்றங்கரையில் ஒரு மனிதன் நின்று கொண்டு அவனைக் கூப்பிடுவதை உணர்ந்தான்.

அந்த மனிதன் பார்த்திபனை நோக்கி ஓடி வந்து ''ஐயா, என் குழந்தை அந்தக் கிணற்றுக்குள் விழுந்து விட்டது. எனக்கு கிணற்றில் இறங்கத் தெரியாது. தயவு செய்து என் குழந்தையை வெளியே எடுங்கள்'' என்று அழுது கொண்டே கெஞ்சினான். உடனே துணி மூட்டையையும், உணவுப் பண்டங்களையும் கீழே வைத்து விட்டு, பார்த்திபன் சரசரவென்று கிணற்றுக்குள் இறங்கினான். ஆனால் அங்கு குழந்தை இருப்பதாகத் தெரியவில்லை. களைத்துப் போன பார்த்திபன் கிணற்றுக்குள்ளிருந்து வெளியே வந்தால் அங்கே அந்த மனிதனையும் காணவில்லை தனது துணிமூட்டை உணவுப் பண்டங்களும் காணவில்லை. தன்னை அந்த மனிதன் ஏமாற்றி விட்டான் என்று பார்த்திபனுக்குப் புரிந்தது. அவன் மௌனமாக அரண்மனை திரும்பினான்.

இந்த நிகழ்ச்சி நடந்து சில நாட்களுக்குப் பிறகு, பார்த்திபன் ஒருநாள் சபையில் அமர்ந்து கொண்டு இருக்கையில் அவனது வீரர்கள் ஒருவனின் கைகளைக் கட்டி இழுத்து



வந்தனர். ''அரசே, நகை வியாபாரி புண்ணிய கோடி வீட்டில் திருடும் போது இவனைக் கையும் களவுமாகப் பிடித்தோம்'' என்றனர் அவனது வீரர்கள். அவன் வேறு யாருமில்லை. அன்று பார்த்திபனை ஏமாற்றித் திருடிய அதே ஆள்தான்.

''யாரங்கே! இவனை சிறையில் அடையுங்கள். நாளை விசாரணை செய்யலாம்'' என்று பார்த்திபன் கூற அவனை வீரர்கள் இழுத்துச் சென்றனர். அன்றிரவு பார்த்திபன் அதே துணி வியாபாரி போல மீண்டும் வேடம் தரித்து சிறைச் சாலைக்குச் சென்று, அந்தத் திருடனை சந்தித்தான். மன்னர் என்று அறியாத அந்தத் திருடன் ஆச்சரியத்துடன், ''அட, நீயும் என்னைப் போல் திருடனா?'' என்று கேட்க பார்த்திபன் தன் வேடத்தைக் கலைத்தான்.



மன்னரிடமே தன் கைவரிசையை காட்டியிருக்கிறோம் என்று அறிந்த அந்தத் திருடன் பயந்து நடுங்கினான்.

''அரசே, என்னை மன்னித்து விடுங்கள். தெரியாமல் அன்று தங்களை ஏமாற்றி தங்கள் உடமைகளையேத் திருடி விட்டேன். என்னை தண்டித்து விடாதீர்கள்'' என்று கதறியழுதான்.

''உஷ்...! சத்தம் செய்யாதே'' என்று அவனை எச்சரித்த பார்த்திபன், ''குற்றம் செய்த நீ தண்டனையிலிருந்து தப்ப முடியாது. நாளை விசாரணைக்குப் பிறகு உனக்கு என்ன தண்டனை தருவது என்பதை முடிவு செய்வேன். ஆனால் நீ என்னிடமிருந்து திருடிய குற்றத்திற்காக உன்னை தண்டிக்க மாட்டேன். நீ அதைப் பற்றி வெளியே யாரிடமும் சொல்லக் கூடாது'' என்று கூறி விட்டு பார்த்திபன் அரண்மனை திரும்பினான்.

மறுநாள் சபை கூடியது. திருடன் சிறையிலிருந்து விசாரணைக்காக அழைத்து வரப் பட்டான். அவனை நோக்கி பார்த்திபன் ''நகை வியாபாரி புண்ணியகோடியின் வீட்டில் நீ திருடியது உண்மையா?'' என்றான். ''ஆம் பிரபு'' என்றான் திருடன்.

''இதுதான் உன் முதல் குற்றமா அல்லது உன்னுடைய தொழிலே திருடுவதுதானா?'' என்றான் பார்த்திபன்.

''திருடுவது என் தொழில் இல்லை. மகாராஜா, தயவு செய்து நான் சொல்வது முழுவதையும் கேளுங்கள்'' என்று தொடங்கிய அந்தத் திருடன், ''நான் படித்தவன். வேலை தேட முயன்று கொண்டிருந்த போது, என் மீது திருடியதாக தவறாகக் குற்றம் சாட்டப்பட்டு நான் சிறையில் அடைக்கப்பட்டேன். செய்யாத குற்றத்திற்காக சிறை சென்று மீண்ட எனக்கு யாரும் வேலை தரவில்லை. வாழ்க்கையில் வெறுப்படைந்த நான் என் உயிரை மாய்த்துக் கொள்ள கிணற்றில் குதித்து விட எண்ணினேன். ஆனால் எனக்கு தைரியம் வரவில்லை. அந்த சமயம் அங்கே ஒரு மனிதன் பெரிய துணி மூட்டையுடன் வருவதைக் கண்டதும் திடீரென எனக்கு ஒரு விபரீத ஆசை ஏற்பட்டது. அவன் கையிலிருந்த மூட்டையைத் திருட நினைத்து என் குழந்தை கிணற்றில் விழுந்து விட்டதாக நாடகமாடி அந்த

மூட்டையைத் திருடினேன். அதில் இருந்த உணவுப் பண்டங்களை வயிறார சாப்பிட்டு, துணிகளை விற்றுப் பணமாக்கினேன். செய்யாத குற்றத்திற்காக என்னை எல்லாரும் திருடன் என்று நம்புகையில் நிஜமாகவே திருடனானால் என்ன தவறு என்று தோன்றியது. அதன் பிறகு தொடர்ந்து சில முறை திருடி, இப்போது அகப்பட்டுக் கொண்டேன்'' என்றான்.

''உனக்கு இந்தத் தொழிலை விட்டுவிட்டு நேர்மையாக வாழ்க்கை நடத்த ஆசை உள்ளதா?'' என்று பார்த்திபன் கேட்டான். ''எனக்கு உழைத்துப் பிழைக்க ஒரு வேலை தேடிக் கொடுப்பீர்களானால் நான் இனி திருடவே மாட்டேன்'' என்றான் திருடன்.

''சரி. நீ இதுவரை திருடிய பொருட்களை அதற்குரியவர்களிடம் திருப்பிக் கொடுத்துவிடு. உனக்கு ஒரு வேலை கிடைக்க நான் ஏற்பாடு செய்கிறேன். உன்னை மன்னித்து விடுகிறேன்'' என்றான் பார்த்திபன்.

அவனுடைய தீர்ப்பைக் கேட்டு திருடனே ஆச்சரியப்பட்டுப் போனான் எனில் சபையோரைப் பற்றிச் சொல்லவே தேவையில்லை.

இந்த இடத்தில் கதையை நிறுத்திய வேதாளம் விக்கிரமனை நோக்கி, ''விக்கிரமா! பார்த்திபனுடைய செயலைப் பார்த்தாயா? சிறையில் அந்தத் திருடனை சந்தித்த போது 'குற்றம் செய்த நீ தண்டனையிலிருந்து தப்ப முடியாது' என்று கூறியவன், மறுநாள் விசாரணைக்குப் பிறகு அந்தத் திருடனுக்கு தண்டனையே தரவில்லை. அவனை மன்னித்து விட்டான். இது மிகவும் ஆச்சரியமாக இல்லையா? அவனுக்கு தண்டனை அளித்தால் சபையில்



எல்லார் முன்னிலையிலும் மன்னரே தன்னிடம் ஏமாந்து போனதைக் கூறி அவமானம் ஏற்படச் செய்வான் என்ற பயத்தினால்தான், அவனுக்கு தண்டனை தரவில்லை என்று தோன்றுகிறது.

தன்னையே ஏமாற்றத் துணிந்த ஒரு திருடனை மன்னிப்பது எந்த விதத்தில் நியாயம்? இதுதான் அரச லட்சணமா? இவ்வாறு ஒரு நாட்டு அரசனே செயற்பட்டால், நாட்டில் குற்றங்கள் பெருகி விடாதா? என்னுடைய சந்தேகங்களுக்கு விளக்கம் தெரிந்தும் நீ மௌனமாக இருந்தால், உன் தலை வெடித்து சுக்கு நூறாகும்'' என்றது.

அதற்கு விக்கிரமன், ''தண்டனையின் நோக்கம் என்ன? ஒருவனை மீண்டும் அந்தக் குற்றம் செய்யாதவாறு திருத்துவதுதான் ஆனால் அந்தத் திருடனுடைய வாக்குப்படி அவன் செய்த தவறுகளுக்காக வருந்துவதும் நேர்மையான வாழ்க்கை நடத்த அவன் தயாராக இருப்பதும் விசாரணையில் தெரிய வந்தது. அப்படிப்பட்டவனை ஏன் தண்டிக்க வேண்டும்? தவிர, குற்றவாளியை குற்றம் புரியத் தூண்டியது எது என்பதை ஆராய்ந்து பார்க்க வேண்டும். அந்தத் திருடன் இயற்கையிலே நல்லவன் என்பதும் வீண் பழியால் செய்யாத தவறுக்கு சிறைப் பட்டதால் அவன் வாழ்க்கை தடம் புரண்டதையும் அறிந்தான். ஆகவே தான் பார்த்திபன் அவனை மன்னித்தானே தவிர அவமானத்திற்கு பயந்து அல்ல. தான் ஏமாற்றப் பட்டது மக்களுக்குத் தெரிய வேண்டாம் என்று பார்த்திபன் ஏன் நினைத்தான் தெரியுமா? உதவி செய்யப்போய் ஏமாற்றப் பட்ட தன் கதை ஊருக்குத் தெரிந்தால் மக்களுக்கு பிறருக்கு உதவி செய்தால் தாங்களும் இவ்வாறு ஏமாறலாம் என்ற எண்ணம் தோன்றலாம். அவ்வாறு மக்கள் சிந்திக்கக் கூடாதே என்று நினைத்துத்தான்'' என்றான்.

விக்கிரமனது சரியான பதிலால் அவன் மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரேக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.






## 300 தொகுப்புகளில் இராமாயணம்

இந்தியாவின் எல்லா மொழிகளிலும் இராமாயணம் இயற்றப்பட்டுள்ளது. துளு போன்ற சிறுபான்மை மொழிகளிலும் பழங்குடியினத்து மக்களின் மொழிகளான சந்தாலி, பிலி ஆகிய மொழிகளிலும் கூட இராமாயணம் இயற்றப்பட்டுள்ளது. சமஸ்கிருதத்தில் மட்டும் இராமாயணம் 25 தொகுப்புகளில் உள்ளன. இந்தியா மட்டு மன்றி அயல்நாடுகளிலும் அந்தந்த நாட்டு மொழிகளில் இராமாயணம் மொழி பெயர்க்கப் பட்டுள்ளதிலிருந்து அது மக்களிடையே எவ்வளவு மகத்தான வரவேற்பைப் பெற்றுள்ளது என்று தெரிகிறது. பாலி, கம்போடியா, சீனா, ஜாபா, லாவோஸ், மலேசியா, தாய்லாந்து, திபெத் போன்ற நாட்டு மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இராமாயணம் என்பது ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் காலத்தால் அழியாத சரித்திர நிகழ்ச்சியாகும்.




## சத்ரபதி இரயில் நிலையம்

மும்பையிலுள்ள சத்ரபதி சிவாஜி இரயில் சந்திப்புக்கு உலகப் பாரம்பரிய அந்தஸ்து சமீபத்தில் வழங்கப்பட்டுள்ளது. இது உலகிலேயே மிக பரபரப்பாக இயங்கும் இரயில் நிலையமாகும். 1878ஆம் ஆண்டு தொடங்கிய இந்த இரயில் நிலையத்தின் கட்டுமானப் பணி 10 ஆண்டுகள் வரை நீடித்தது. முதலில் இதற்கு இராணி விக்டோரியா சந்திப்பு என்று பெயரிடப்பட்டது. 1929ஆம் ஆண்டு கூடுதலாக 13 நடைமேடைகளும் 1996ஆம் ஆண்டு இரண்டு நடைமேடைகளும் கட்டப்பட்டன. அதே ஆண்டு இதன் பெயர் சத்ரபதி சிவாஜி இரயில் சந்திப்பு என மாற்றப்பட்டது. ஒரு நாளைக்கு இங்கு கூடுகின்ற பயணிகள் 30 லட்சம் பேர்.



அயல் நாட்டுக் கதைகள் (ஜப்பான்)

# அன்று முதல் கடல் நீர் உப்புக் கரித்தது

பல ஆண்டுகளுக்கு முன் ஒரு கிராமத்தில் சுசு, யாமர் என்ற இரு நண்பர்கள் வசித்து வந்தனர். சுசு உடல் வலிமை கொண்டவன். சுறுசுறுப்பானவனும் கூட. யாமரும் உடல் வலிமையில் குறைந்தவன் அல்ல. ஆனால் அவன் ஒரு சோம்பேறி. இருவரும் வாலிப வயது அடைந்து திருமணமும் புரிந்து கொண்டனர். சுசு ஒரு சிறிய



குடிசையில் தன் குடும்பத்துடன் வாழ்ந்து வந்தான். சுசுவுக்கு உழைத்துப் பிழைக்க வேண்டிய நிலை. ஆனால் யாமரின் தந்தை நிலபுலன்களை விட்டுச் சென்றிருந்ததால், யாமர் வேலை ஏதும் செய்யாமல் சுகவாசியாகக் காலம் கழித்தான். அப்படி இருந்தும் இருவரும் நண்பர்களாகவே இருந்து வந்தனர்.

அவர்கள் இருவரும் காட்டுக்கு அடிக்கடி சேர்ந்து செல்வதுண்டு. ஒருமுறை காட்டிலுள்ள குகையினுள் இருவரும் நுழைந்தனர். அந்த இருட்டு குகையின் ஒரு மூலையில் சில கற்கள் பளபளப்பாக மின்னிக் கொண்டிருப்பதைக் கண்ட சுசு, அவற்றை ஆர்வத்துடன் பொறுக்கி எடுத்துக் கொண்டான். இருவரும் வெளியே வந்து அந்தக் கற்களை வெளிச்சத்தில் சோதித்து பார்த்தனர். அவற்றைப் பார்த்தவுடனே, யாமருக்கு அவை விலையுயர்ந்த வைரக்கற்கள் எனத் தெரிந்து விட்டன. அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் யாமர் சுசுவிடம், ''நாளைக்கு நகரத்துக்குச் செல்கிறேன் இதற்கு ஏதாவது மதிப்புள்ளதா என்று கண்டு பிடித்து வருகிறேன்'' என்றான்.

மறுநாள் யாமர் அவற்றை நகரத்துக்கு எடுத்துச் சென்றான். அவன் எதிர்பார்த்தது போலவே அவை வைரக்கற்கள் என்று தெரிந்ததும் அவற்றை விற்று ஏராளமான பணத்துடன் யாமர் வீடு திரும்பினான். சுசுவுக்கு ஒரு சில



காசுகளை மட்டும் கொடுத்துவிட்டு ''சுசு நான் நினைத்தபடியே அவை உபயோகமற்ற சாதாரண கற்கள். அவற்றை விற்றதில் சில காசுகள் தான் கிடைத்தன'' என்று பொய் சொல்லி பணம் முழுதும் தானே எடுத்துக் கொண்டான்.

தனக்குக் கிடைத்த பணத்தைக் கொண்டு மாளிகைக் கட்டிக் கொண்டு யாமர் ஆடம்பரமாக வாழ ஆரம்பித் தான். சுசு, தன் நண்பனின் புதிய அந்தஸ்தைக் கண்டு மனம் மகிழ்ந்தான்.

ஒருமுறை சுசுவின் மகன் நோய்வாய்ப் பட்டபோது, மருந்து வாங்க சுசுவுக்குப் பணம் தேவைப் பட்டது. அன்றொரு நாள் தான் குகையினுள் கண்ட கற்கள் மீண்டும் கிடைத்தால், அவற்றை விற்றுப் பணம் திரட்டலாம் என்று அந்த குகையை அடையும்போது அதனுள் இருந்து யாமர் வெளியே வருவதைக் கண்டு சுசு ஆச்சரியத்தில் மூழ்கினான்.

''யாமர் எதற்காக இங்கே தனியே வந்தாய்?'' என்று சுசு கேட்க, ''ஒன்று மில்லை. இந்த வழியே வந்தேன். உள்ளே சென்று பார்க்கலாம் என்று தோன்றியது, ஆமாம், நீ எதற்கு இங்கு வந்தாய்?'' எனக் கேட்க சுசு தான் அந்த வைரக் கற்களை தேடி வந்ததாக உண்மையைச் சொன்னான்.

உடனே யாமர், ''நல்லது. நாம் இருவரும் சேர்ந்து தேடுவோம்'' என்று கூற, இருவரும் தேடினர். ஆனால் இந்த முறை அவர்களுக்கு ஒன்றுமே கிடைக்கவில்லை. இருவரும் ஏமாற்றத்துடன் திரும்பு கையில் ஒரு மரத்தடியில் நின்று கொண்டிருந்த ஒரு கிழவி யாமரை நோக்கி, ''மகனே, இந்த விறகுக் கட்டை சற்று தூக்கியெடுத்து என் தோள் மீது வைப்பாயா?'' என்று கேட்டாள். யாமர் அதை செவி மடுக்காமல் சென்று விட்டான். ஆனால் இரக்க மனம் கொண்ட சுசு அந்த விறகுக் கட்டை தானே தூக்கிக் கொண்டு அந்தக் கிழவியின் வீடுவரை எடுத்துச் சென்றான். அதனால் மகிழ்ச்சியுற்ற அந்தக் கிழவி சுசுவுக்கு ஒரு கேக் கொடுத்து ''இதை உண்டால் உனது பசி மட்டுமல்ல. உனக்குள்ள எந்த நோயும் நீங்கி விடும்'' என்றாள். அதைத் தன்



நோயுற்ற மகனுக்குத் தரலாம் என்று எண்ணிய சுசு வீடு நோக்கி நடந்தான். செல்லும் வழியில் மற்றோரிடத்தில் பாதையில் படுத்திருந்த ஒரு நோயாளி, ''ஐயா நான் ஒரு நோயாளி. நான் பல நாட்களாகச் சாப்பிடவே இல்லை'' என்று முனக அந்த கேக்கை நோயாளிக்குத் தந்து விட்டான்.

அதை ஆவலுடன் உண்ட நோயாளிக்கு அவனுடைய பசி மட்டுமல்லாமல் நோயும் அகன்றது. சுசுவின் செய்கையால் நெகிழ்ந்து ''உன்னுடைய உதவிக்கு நான் உனக்கு இதைப் பரிசாக அளிக்கிறேன்'' என்று கூறி மூங்கில் கம்புகளால் செய்யப்பட்ட ஒரு சக்கரத்தைக் கொடுத்தான். ''தம்பி, இது சாதாரணச் சக்கரமல்ல. இதை வலப்பக்கம் நகர்த்தினால், நீ கேட்பது கிடைக்கும். கேட்டது கிடைத்தவுடன், மீண்டும் நீ இதை இடது பக்கம் திருப்பி விட வேண்டும். இல்லையேல் நீ கேட்ட பொருள் வந்து கொண்டேயிருக்கும். உனது தேவைகள் நிறைவு பெற்றவுடன் இதைக் கடலுக்குள் எறிந்து விடு'' என்றான். சுசு அதைப் பெற்றுக் கொண்டு கிளம்பினான். சக்கரத்தின் மகிமையில் முழு நம்பிக்கை இல்லாததால், பண உதவி வேண்டி தன் நண்பன் யாமரிடமே சென்றான். ''யாமர் எனக்குக் கொஞ்சம் பணம் தேவை. என் மகன் நோயில்....'' என்று தொடங்கிய சுசுவை இடைமறித்து ''என்னால் உதவி செய்ய முடியாது'' என்று இரக்கமின்றி கூறி சுசுவை திருப்பி அனுப்பிவிட்டான்.

''அப்பா, இது என்ன சக்கரம்?'' என்று கேட்ட தன் மகனிடம் ''இதைக் கொண்டு நாம் விரும்பிய உணவைப் பெறலாம்'' என்று சொல்லிக் கொண்டே சுசு விளையாட்டாக அதை வலப்புறம் அசைத்தான். என்ன அதிசயம்? உடனே பல உணவுப் பொருட்கள் அவர்கள் முன் தோன்றின. மீண்டும் சோதிக்க விரும்பிய சுசு, தன் மகனுக்கு மருந்து தேவை என்று வலப்புறம் சக்கரத்தை நகர்த்த தேவையான மருந்தும் தோன்றியது. ஒவ்வொரு முறையும் தேவையானதைப் பெற்றவுடன் சக்கரத்தை இடது பக்கம் நகர்த்தியவுடன் பொருட்கள் தோன்றுவது தாமாகவே நின்று விட்டன. மருந்தை மகனுக்கு அளித்து விட்டு கிடைத்த உணவை சாப்பிடும் போது திடீரென மழை பெய்து குடிசையில் ஆங்காங்கே தண்ணீர் ஒழுகியது. ''ஒரு நல்ல வீடாகக் கிடைத்தால் போதும்'' என்று விரும்ப, அதுவும் நிறை

வேறியது. அதுவும் எப்படி? அந்த வட்டாரத்திலேயே பெரிய அழகான மாளிகையாக அவன் வீடு மாறியது. சில நாட்களிலேயே சுசுவின் வாழ்க்கைப் பாதை மாறி அந்த கிராமத்தில் மிகப் பெரிய செல்வந்தராக சுசு மாறினான்.

இதையெல்லாம் பார்த்த யாமருக்கு பொறாமைத் தீ கொழுந்து விட்டு எரிந்தது. இவ்வளவு செல்வமும் எவ்வாறு சுசுவுக்குக் கிடைத்தது என்று அறிய யாமர் மிகுந்த ஆவல் கொண்டான். ஓர் இரவு யாமர் சுசுவின் மாளிகையில் ஒளிந்திருந்து பார்க்கையில் சுசு ஒரு சக்கரத்தைப் பயன்படுத்தித் தான் விரும்பியவற்றை அடைவதைக் கண்கூடாகப் பார்த்து விட்டான். தான் வேண்டியதெல்லாம் கிடைக்கப் பெற்ற பிறகு சுசு அந்தச் சக்கரத்தை கடலில் விட்டு விட முடிவு செய்திருந்த நேரத்தில் அந்த சிரமத்தை அவனுக்குத் தராமல், யாமர் அதை ஒருநாள் இரவு சுசுவின் மாளிகையிலிருந்து திருடிக் கொண்டான்.

அருகிலுள்ள தீவுக்குச் சென்று அங்கே சக்கரத்தின் உதவியால் ஒரு தனி மாளிகை ஏற்படுத்தி ஆடம்பர வாழ்க்கை வாழத் திட்டமிட்ட யாமர், ஒருநாள் அந்த சக்கரத்துடன் படகில் ஏறி கடலில் பயணம் செய்தான். சற்று தூரம் பயணம் செய்த பிறகு, பசியெடுத்ததால் யாமர் தான் கொண்டு வந்திருந்த உணவை உண்ணத் தொடங்கினான். அந்த உணவில் உப்பு இல்லை. 'அதனால் என்ன சக்கரத்தின் உதவியால் கொஞ்சம் உப்பு வரவழைத்தால் போகிறது' என எண்ணி அந்த சக்கரத்தை வலப்பக்கம் அசைத்து உப்பு வேண்டுமெனக் கேட்டான். உடனே ஒரு குவியல் உப்பு அவன் முன் தோன்றியது. அந்த உப்பு அதிகமாகிக் கொண்டே சென்றது. அதை எவ்வாறு நிறுத்துவது என்று யாமருக்குத் தெரியவில்லை. சிறிது நேரத்தில் உப்பு மலையளவு படகில் குவிந்து விட, அந்த பாரம் தாங்காமல் படகு கடலில் மூழ்க யாமரும் நீரில் மூழ்கி இறந்தான். ஆனால் அன்று தொடங்கிய உப்பு, இன்னமும் நிற்காமல் தோன்றி கரைந்து கொண்டே இருப்பதால் எத்தனை மழை பெய்தும், கடல் நீர் உவர்ப்பு குறையவே இல்லை.



# செய்திச்சுடர்

## புழுவை உண்பதில் கின்னஸ் சாதனை



புழுக்களையும், பாம்புகளையும் சீன மக்கள் விரும்பி உண்ணுவது நாம் அனைவரும் அறிந்ததே. ஆனால் நம் தமிழ் நாட்டிலேயே 'பாம்பு மனிதன்' எனப்படும் தாம்பரத்தைச் சேர்ந்த சி.மனோகரன் 200 மண்புழுக்களை அப்படியே முழுதாக விழுங்கி ஒரு கின்னஸ் சாதனை படைத்துள்ளார்.

இந்த மண்புழுக்களின் நீளம் சுமார் 10 செ.மீ. இவற்றை அவர் விழுங்க எடுத்துக் கொண்ட நேரம் 30 வினாடிகள் மட்டுமே. இவ்வாறு சாதனை படைப்பதற்கு மூன்று ஆண்டுகள் முன் வரை அவர் எந்தப் புழுக்களையும் விழுங்கவில்லை. அதற்குமுன் இவ்வாறு உண்டதுண்டாம். குட்டிப்பாம்புகளை நாசித்துவாரத்தில் நுழைத்து வாய் வழியே எடுத்துவிடக்கூடிய திறமை இவருக்கு உண்டாம். இவருக்குப் பாம்பு மனிதன் என்று பெயர் வர இதுவே காரணமாயிருந்ததாம்.

## உயரத்தில் பணிபுரியும் தபால்காரர்கள்

சுமார் 14,500 அடி உயரத்தில் இந்தியாவையும் சீனாவையும் இணைக்கும் நாத்து லா என்னும் ஒரு மலைப்பாதை உள்ளது.

பொதுவாக அங்கு யாரும் நடந்து செல்வது கிடையாது. ஆனால் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் 'யி' என்ற சீனத் தபால்காரர் தனது தபால் பையுடன் இந்தப் பாதையைக் கடந்து இந்திய எல்லைக்குள் நுழைந்து மூன்று நிமிடங்களுக்குள் தபால்களை பட்டுவாடா செய்துவிட்டுச் செல்வார். அதேபோல் வியாழக்கிழமை அன்று பகதூர் என்ற இந்திய தபால்காரர் இதே வழியாக சீன எல்லையில் நுழைந்து தபால்களைப் பட்டுவாடா செய்துவிட்டு திரும்பி வந்து விடுவார். இவர்கள் விசா இல்லாமல் தங்கள் கடமையைச் செய்கின்றனர்.



இது வரை நடந்த கதை... ஒரு மர்மமான தண்ணீரினால் பரவும் வியாதி உலகத்தை ஆட்கொண்டு வருகிறது. மனித இனம், பிராணிகள், தாவரங்கள்... யாருமே இந்த வியாதியிலிருந்து தப்ப முடியவில்லை. மேற்கொண்டு படியுங்கள்...

சூர்யராஜ் தனக்குப் பிடித்தமான சக்தியின் ஆகாரமான ஒரு **பார்லே-ஜீ** பேக்கை சாப்பிடுகிறான்.

ஜீ-மேன் ஆவதற்கு முன் சூர்யராஜ் ஒரு சில விநாடிகளுக்கு சூரியனிலிருந்து ஒளியைப் பெறுகிறான் என்று வரலாறு கூறுகிறது. அதனால் தான் அந்த ஒரு சில விநாடிகளுக்கு உலகத்தில் இருள் சூழ்கிறது போலும்...

மேலும் இந்த மாற்றத்தை ஏன் ஒருவராலும் பார்க்க முடிவதில்லை.






அனைத்து தீமைகளையும் அழிப்பவன்.

ஜீ-மேன் ஒரு தீப்பந்தாக மாறி கிளம்பிச் செல்கிறான்.






க்கான பவர் சப்ளை




Visit: www.parleproducts.com


அந்த தீப்பந்து நீர் டாங்க்கிற்கு அருகில் வருகிறது


THOOOOOOOOOOOMP!
KHADDANG


ஹல்லோ ! யாராவது இருக்கீங்களா?

AOOGHH!

எல்லா வலிமையும்
கொண்ட இந்த
குளுக்கா
உடனா நீ விளையாடறே
ஜாக்கிரதை !

தண்ணில
விளையாடறதுன்னா
எனக்கு எப்போதும்
பிடிக்கும் குளுக்கா...

இப்போ
இதோ ரவுண்ட்
ரெண்டு...



க்கான பவர் சப்ளை






SPLAT

ஹீ... ஹீ
இது கிச்சுக்கிச்சுமூட்டுது







BLIP
BLIP
கோளே! சொல்லு இந்த அரக்கன் யார்?


என் சோதனைகளிலிருந்து தெரியவருவது என்னவெனில் இது ஐஸ், தண்ணீர், நீராவி மற்றும் மாற்று உயிரின செல்லின் ஒரு சேர்க்கை. இதைத் தண்ணீரின் நான்காவது நிலை என்று சொல்லலாம். இது மிகவும் நிலையற்றதானதாகும்.


எப்படியாவது இந்தக் கொடியவனை ஒரு நிலையில் நிலைத்து இருக்கும்படி செய்ய வேண்டும்...


ஆனா அது எப்படி ?


எப்படி?

ஜீ-மேன் ஒரு தீப்பந்தாக மாறுகிறான்.

நீ எவ்வளவு நாள் தப்பிச்சுக்கிட்டு இருக்க முடியும். ரொம்ப சீக்கிரத்திலேயே உன்னை நான் பிடிச்சிருவேன்...

ஜீ-மேனிடம் மற்ற திட்டங்கள் இருக்கின்றன.

SSSSZZZZZZZZZZZZZZ

உங்கள் விஞ்ஞான வகுப்பில் அதிகப்படியாக கவனம் செலுத்தியிருந்தால், நான் என்ன செய்யப் போகிறேன் என்பது உங்களுக்குப் புரியும்.

HUH!!!

SPLOT


SPLOT
SPLOT
SPLOT
SPLOT
ஜீ-மேன் தன் அதிக சக்தி படைத்த உஷ்ணத்தைப்
பயன்படுத்தி நீர் அரக்கனை நீராவியாக மாற்றுகிறான்


ஐய்யோாாாாாாாாாாாாா
நான் ஆனந்தமா
இருக்க
ஆரம்பிக்கும்போது...


முடிவு எடுக்க
தயங்கற ஆட்களை
எனக்குப்
பிடிக்காது.


மிக விரைவாக யோசிக்கும் ஆற்றல் படைத்ததினால் ஜீ-மேன் மற்றொரு
அபாயத்தைத் தவிர்க்க முடிகிறது.

ஜீ-மேனின் மற்றொரு பிரமிப்பூட்டும் செயலை மேஜர் சூர்யராஜ் காணத் தவறினான் போலும்...







இந்த தண்ணீர் அபாயத்திற்கு முடிவு ஏற்பட்டு விட்டது. வாழ்க்கை இப்போது மீண்டும் பழைய நிலைக்கு வந்து விட்டது













மற்றொரு இடத்தில்






PARLE

# ஜீ-மேன் புதிர்

1. ஜீ-மேன் உண்மையிலேயே________________
   a) அம்ரிஷ் பூரி
   b) மேஜர் சூர்யராஜ்
   c) டெர்ரோலீன்

2. டெர்ரோலின் வசிக்கும் வீட்டின் பெயர்________________
   a) மேல்லரி டவர்ஸ்
   b) த பெட்ரோனா டவர்ஸ்
   c) த டி-டவர்

3. தான் ஜீ-மேன் இல்லாதபோது மேஜர் சூர்யராஜ் ஒரு____________
   a) டீச்சர்
   b) முடி அலங்காரம் செய்பவர்
   c) கள்ளிச் செடி

4. மேஜர் இதை சாப்பிட்டதும் ஜீ-மேன் ஆகிறார்______________
   a) பப்பாளிப் பழம்
   b) பார்லே-ஜீ
   c) காரட் அல்வா

5. ஜீ-மேனின் தோழன்________________
   a) கோளம்
   b) அவருடைய வலது கரம்
   c) அதிசய நாய் - மோதி

விடை : 1-b, 2-c, 3-a, 4-b, 5-a






# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி

## சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

**கீழ்க்காணும் கதையைப் படியுங்கள்:**



ஒரு பண்டிதர் ஒருமுறை படகில் நதியைத் தாண்டிச் செல்ல வேண்டியிருந்தது. படகு ஓட்டுபவனையும் அவரையும் தவிர படகில் வேறு யாருமில்லை. அவரை நோக்கி படகோட்டி, ''ஐயா, படகு அக்கரையை அடைய நேரம் பிடிக்கும். அதுவரை பொழுது போக்காக ஏதாவது பேசிக் கொண்டிருக்கலாமா?'' என்றான். பண்டிதரும் சம்மதித்தார். படகோட்டி, ''ஐயா, உங்களை ஒரு கேள்வி கேட்க என்னை அனுமதியுங்கள். உங்களால் விடை கூற இயலவில்லை என்றால், நீங்கள் எனக்கு இரண்டு ரூபாய் தர வேண்டும். நான் தவறினால், நான் உங்களுக்கு ஒரு ரூபாய் கொடுப்பேன். நான் ஏழையாதலால் என்னால் ஒரு ரூபாய் மட்டுமே தர இயலும்'' என்றான். அதற்கிணங்கிய அந்தப் பண்டிதர், ''சரி உன்னுடைய கேள்வி என்ன?'' என்றார். உடனே படகோட்டி, ''நூறு சிறகுகள் கொண்ட, பகலில் உறங்கி இரவில் விழித்திருக்கும் பறவை எது?'' என்று கேட்டான்.

- அந்தப் பண்டிதர் அதற்கு என்ன பதில் அளித்திருப்பார்?
- போட்டியின் முடிவு என்ன ஆகியிருக்கும்?

உங்கள் விளக்கங்களை 100-150 வார்த்தைகளில் எழுதி ஒரு உறைக்குள் வைத்து அதன் மீது கதைப் போட்டி என எழுதி கீழ்க்காணும் கூப்பனையும் சேர்த்து அனுப்பவும்.

## முடிவு தேதி : ஜனவரி 31, 2005

பெயர் ------------------------------------வயது-----------பிறந்த தேதி-----------------

பள்ளியின் பெயர் ----------------------------------------------------------------------

வகுப்பு------------------------------வீட்டு முகவரி-----------------------------------------

-------------------------------------------------------------------------------------------

---------------------------------------------------------------பின்கோடு-------------------

பெற்றோர் கையொப்பம்                                   கலந்து கொள்வோரின் கையொப்பம்


**சந்தமாமா இந்தியா லிமிடெட்**

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.

ஆந்திரப் பிரதேச நாட்டுப்புறக் கதை

# உயிர்த்தெழுந்த இளவரசன்

மன்னர் மகேந்திரருக்கு ஏழு புதல்வர்களும் ஒரு பெண்ணும் பிறந்தனர். அவளுக்கு சொப்பன சுந்தரி என்று பெயரிடப்பட்டது. மன்னர் தாம் இறப்பதற்குள் தன் புதல்வர்கள் அனைவருக்கும் திருமணம் செய்து விட்டார். மன்னர் இறக்கும் சமயம், சொப்பனசுந்தரி சிறுமியாக இருந்ததால், அவள் திருமணம் மட்டும் நடைபெற வில்லை. சில ஆண்டுகளுக்குப் பின்னர் ராணியும் இறந்து விடவே, சுந்தரியைப் பேணி வளர்க்கும் பொறுப்பு அவளுடைய ஏழு அண்ணன்களைச் சேர்ந்தது.



அண்ணன்மார்கள் அனைவரும் சுந்தரியிடம் மிகவும் பாசம் வைத்திருந்தனர். ஆனால் அவர்களுடைய மனைவிகள் அவளைக் கேவலமாக நடத்தினர். பல நாட்கள் பொறுமையுடனிருந்த சுந்தரி ஒரு நாள் பொறுக்க முடியாமல் தன் அண்ணிகளை நோக்கி, ''நீங்கள் இவ்வாறு என்னை கீழ்த்தரமாக நடத்துவதைப் பற்றி என் அண்ணன்களிடம் புகார் செய்யப் போகிறேன்'' என்று எச்சரிக்கை விடுத்தாள். அதைக் கேட்டு கோபமடைந்த அவளுடைய அண்ணிகள் அந்த சமயம் தங்கள் கணவன்மார்கள் யாரும் இல்லாத வாய்ப்பைப் பயன்படுத்தி சுந்தரியை அரண்மனையை விட்டே துரத்தி விட்டனர்.

அவர்களால் துரத்தப்பட்ட சுந்தரி அரண்மனையை விட்டு வெளியேறுமுன், ''நீங்கள் என்னை துரத்தி விட்டீர்கள். ஆனால் பாருங்கள். நீங்கள் பொறாமைப் படும்படி ஒரு அழகான ராஜகுமாரனைத் திருமணம் செய்து கொண்டு திரும்பி வருவேன்'' என்றாள்.

''ஆமாம், உனக்காக இளவரசன் சந்தன் ராஜா காத்துக் கொண்டு இருக்கிறான் பார்! போ, போ'' என்று

ஏளனம் செய்தனர். அவளுடைய அண்ணிகளில் ஒருத்தி ஓடிவந்து, ''சுந்தரி இதோ இந்தத் துணி மணிகளை எடுத்துச் செல். சந்தன் ராஜாவை நீ திருமணம் புரிகையில் இவை உனக்குப் பயன்படும்'' என்று மீண்டும் ஏளனம் செய்ய மற்றவர்கள் விழுந்து விழுந்து சிரித்தனர். அரண்மனையை விட்டு வெளி யேறிய சுந்தரியின் மனதில் சந்தன் ராஜாவைப் பற்றிய சிந்தனையே இருந்தது.



அப்போது பாதையில் எதிரே பெண்கள் கூட்டம் ஒன்று வந்து கொண்டிருந்தது. அவர்களை நோக்கி, ''பெண்களே, சந்தன் ராஜா யார் என்று தெரியுமா?'' என்று கேட்டாள். அவர்கள் எல்லாரும் மௌனமாக ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். பிறகு அவர்களில் ஒருத்தி, ''அவர் வெகு நாட்களுக்கு முன் இறந்து விட்டாரே!'' என்றனர். ''அவர் ராஜகுமாரரா? எந்த நாட்டு இளவரசர் அவர்?'' என்று மீண்டும் சுந்தரி கேட்க, அந்தப் பெண் ''அவர் தென்திசை ராஜ்யத்தில் இளவரசராக இருந்தார்'' என்று சொல்லிவிட்டுச் சென்று விட்டாள்.

சுந்தரி தென்திசையை நோக்கி நடக்க ஆரம்பித்தாள். பல நாட்களுக்குப்பின் ஒரு காட்டினை அடைந்தாள். அந்தக் காட்டில் ஒரு பெரிய மாளிகை தென்பட்டது. சுற்றுமுற்றும் யாரும் தென்பட வில்லை. துணிச்சலுடன் அந்த மாளிகையினுள் நுழைந்தாள். உள்ளே ஒரு நாயும், பூனையும் படுத்திருந்தன. நாயும், பூனையும் எழுந்து அவளைச் சுற்றி சுற்றி வந்தன. அதன் செய்கையால் அவை பசியாக இருக்கும் என தான் கொண்டு வந்திருந்த உணவில் கொஞ்சம் அளித்தாள். நாயும், பூனையும் மிகுந்த ஆர்வத்துடன் அதை உண்டன. அதை உண்டு விட்டு உள்ளே சென்ற நாய், ஒரு பொட்டலம் கொண்டு வந்தது.

''பெண்ணே, இதிலுள்ள சிவப்புப் பொடியை நீ எடுத்துக் கொள்'' என்று நாய் பேசியதும் சுந்தரி ஆச்சரிய மடைந்தாள். ''பரவாயில்லையே! உனக்குப் பேச வருகிறதே!'' என்ற சுந்தரி, ''இந்த சிவப்புப் பொடி எதற்கு?'' என்று கேட்டாள். ''இதை நெற்றியில் பூசிக் கொண்டால், நீ விரும்பும் ஆண் உனக்கு மணாளனாவான்'' என்றது நாய்.



உடனே பூனையும் ஒரு பொட்டலம் எடுத்து வந்து, ''இதிலுள்ள வெண்மைப் பொடியை எடுத்துக் கொள். இதைக் கண் இமைகளில் பூசிக் கொண்டால், மற்றவர் கண்களுக்குத் தெரியாமல் நீ மறைந்து விடுவாய். ஆனால் உன்னால் அவர்களைப் பார்க்க முடியும்'' என்றது. சுந்தரி அளித்த உணவு அவற்றுக்கு மிகவும் பிடித்திருக்கவே நன்றியறிதலின் பொருட்டு அந்த மந்திரப் பொடிகளை கொடுத்தன வாம்.

அவற்றுக்குத் தன் நன்றியைத் தெரிவித்த பிறகு, சிவப்புப் பொடியை நெற்றியிலும் வெள்ளைப் பொடியை தன் கண் இமைகளிலும் பூசிக் கொண்ட சுந்தரி உடனே தன் பயணத்தைத் தொடர்ந்தாள். இரவு வெகுநேரம் காட்டில் சென்றபின் ஒரு பெரிய அரண்மனையைக் கண்டாள். அரண்மனை நடுவில் ஒரு திறந்த வெளி முற்றத்தில் ஒரு பெரிய மரத்தடியில் ஒரு மேடையின் மீது ஓர் உருவம் படுத்திருந்தது. அந்த உருவத்தின் அருகே சென்று பார்த்த சுந்தரிக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. ஒரு அழகான ராஜகுமாரன் அசைவற்றுப் படுத்து இருந்தான். அவன் தூங்கிக் கொண்டு இருப்பவனாகவும் தெரியவில்லை. அதே சமயம் இறந்தவனாகவும் தெரியவில்லை. அடுத்து என்ன செய்வது என சுந்தரி யோசிக்கையில் திடீரென அந்த உருவம் அசைந்தது. அந்த ராஜகுமாரன் திடீரெனக் கண் விழித்துப் பார்த்தான். ''தேவதைகளே? நீங்கள் எங்கே?'' என்று அவன் முனக, சுந்தரி தைரியமாக அவன் முன் சென்று நின்றாள். ''யார் நீ? நீ தேவதை இல்லையே! நீ எப்படி இங்கு வந்தாய்?'' என்று அவன் கேட்க, சுந்தரி அவன் அருகில் சென்று, ''என் பெயர் சொப்பனசுந்தரி. நான் தேவதை இல்லை. நான் ஒரு இளவரசி. எனக்கு ஏழு அண்ணன்கள் உண்டு. என் அண்ணிகள் என்னை அரண்மனையை விட்டுத் துரத்தி விட்டனர். நான் இப்போது ஒரு அனாதை. நான் சந்தன் ராஜாவைத் தேடி அலைகிறேன். அவரைத்தான் திருமணம் செய்வதாக இருக்கிறேன்''

எனக் கூறினாள். ''நீ தேடிக் கொண்டிருக்கும் சந்தன் ராஜா நான்தான்'' என்றவனைக் கண்டு சுந்தரி அளவற்ற ஆச்சரியத்தில் சிலையென சமைந்தாள்.

''ஆனால் சுந்தரி, நீ என்னைத் திருமணம் செய்து கொள்ள முடியுமா என்பது சந்தேகம். காரணம் நாளெல்லாம் இறந்தவனாகக் கிடக்கும் நான், நடு இரவில் சில மணி நேரங்களுக்கு மட்டும் உயிர் பெறுகிறேன்'' என்றான் அவன். ''அது ஏன் அப்படி? சற்றுமுன் தேவதைகளை அழைத்தீர்களே? யார் அவர்கள்?'' என்று ஆச்சரியத்துடன் சுந்தரி கேட்டாள். ''ஓ! அதுவா! அது ஒரு பெரிய கதை'' என்று தொடங்கிய சந்தன் ராஜா. ''என்னுடைய பெற்றோர்களுக்குத் திருமணம் ஆகிப் பல ஆண்டுகளாக குழந்தைகளே இல்லை. ஒருமுறை வேட்டையாடச் சென்றபோது, என் தந்தை காட்டில் வழி தவறிப் போய் ஒரு முனிவரின் ஆசிரமத்தை அடைந்தார். இரவு தங்க இடமும், உண்ண உணவும் அளித்த அந்த முனிவர் மறுநாள் காலையில் என் தந்தையிடம் ஒரு மாலையைக் கொடுத்தார். 'இந்த மாலையை உன்னுடைய ராணிக்குக் கொடுத்து அவளை அணியச் செய். இந்த மாலைக்கு உயிர் கொடுக்கும் சக்தி உள்ளது. இதை ஏன் கொடுக்கிறேன் எனில், ராணிக்கு எதிர்காலத்தில் உண்டாகும் குழந்தை இறந்து பிறக்கும். ஆனால் இந்த மாலையை அணிந்து கொண்டதும், அது உயிர் பெறும். அந்தக் குழந்தை இந்த மாலையை அணிந்து கொண்டு இருக்கும் வரை உயிருடன் இருக்கும்' என்றார்.



என் தந்தை மிகவும் மகிழ்ச்சியுடன் அரண்மனை திரும்பியதும், அதை என் தாய்க்குக் கொடுக்க, அவள் அதை அணிய, சில மாதங்களில் அவள் ஒரு குழந்தைக்குத் தாயானாள். அந்தக் குழந்தைதான் நான். இறந்தே பிறந்த நான் அந்த மாலையை அணிந்ததும் மீண்டும் உயிர் பெற்றேன். அதிலிருந்து இந்த மாலையை எப்போதும் அணிந்திருந்தேன். வாலிபனான பிறகு ஒருநாள் இரவு அரண்மனை உப்பரிகையில் திறந்த வெளியில் உறங்கும் போது வானில் உலவி



வந்த சில தேவதைகள் என்னைப் பார்த்து விட்டு என்னருகில் வந்து அந்த தேவதைகள் என்னைச் சுற்றி களிப்புடன் நடனம் ஆடினர். பிறகு அவர்களுள் ஒருத்தி என்னை அவளுடன் மணம் புரிந்து கொள்ளச் சொன்னாள். அவளை மணம் செய்து கொண்டு அவளுடன் தேவலோகம் செல்ல வேண்டும் என்பது அவள் விருப்பம். நான் மறுத்தேன். திடீரென என் கழுத்திலிருந்த மாலையை அபகரித்துக் கொண்டு அவள் மறைய மற்றவர்களும் மறைந்தனர். நான் உயிரிழந்தேன். அந்த மாலை சந்தன மலர் மாலையாதலால் என் பெர் சந்தன் ராஜா என்று வைத்திருந்தனர்.

மறுநாள் உயிரிழந்து கிடந்த என்னைக் கண்டு என் பெற்றோர்கள் மிகுந்த அதிர்ச்சி அடைந்தனர். என் கழுத்திலுள்ள மாலையைக் காணாததால் அதுவே நான் இறக்கக் காரணம் என்று அறிந்து தேவதையின் செயல் அறியாமல் அவர்கள் பல இடங்களில் தேடினர். இறந்திருந்த என்னை எரிக்கவோ, புதைக்கவோ செய்யாமல் நடுக்காட்டில் ஓர் அரண்மனை கட்டி என்னை இங்கே வைத்து விட்டனர். பகல் வேளைகளில் என் பெற்றோர்கள் என்னை இங்கே வந்து அடிக்கடி காணுவதுண்டு. எனக்கு உயிரில்லை என அருகில் அமர்ந்து அழுது விட்டு சென்று விடுவார்கள். அந்த தேவதையின் சக்தியால் நடு இரவு நேரங்களில் மட்டும் எனக்கு உயிர் வரும். அப்போது அவள் என் முன்னே வந்து தன்னைத் திருமணம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்து வாள். நான் மறுப்பேன். பிறகு அவள் மறைந்து விடுவாள். இதுதான் விஷயம். ஆனால் இன்று இரவு அவள் ஏனோ வரவில்லை'' என்றான்.

''சந்தன் ராஜா, நான் சொல்வதைக் கேளுங்கள். நான் இங்கேயே தங்குகிறேன். இன்றில்லாவிடில் நாளை இரவு அவள் வரக்கூடும். அவளிடமிருந்து அந்த மாலையை எப்படியாவது நான் கைப்பற்றி விடுகிறேன்'' என்றாள் சுந்தரி.

காலைப்பொழுது ஆரம்பிக்கும் முன்பே, சந்தன் ராஜா மீண்டும் அசைவற்று பேச்சு மூச்சில்லாமல் போனான். அவனுடைய பெற்றோர் களும் அவனைப் பார்த்து கண்ணீர் வடித்து விட்டுச் சென்றனர். ஆனால் சுந்தரி அந்த வெள்ளைப் பொடியை

பூசிக் கொண்டிருந்ததால் அவள் அவர்கள் கண்களில் படவில்லை. நடுநிசியும் வந்தது. சந்தன் ராஜா மீண்டும் உயிர் பெற்றான். அப்போது வானில் இனிய கீதம் மிதந்து வந்தது. சந்தன் ராஜா பரபரப்படைந்து, ''சுந்தரி, தேவதைகள் வருகிறார்கள் எனத் தோன்றுகிறது. அவர்களில் சிவப்பு சிறகுகள் கொண்டவளிடம் என்னுடைய மாலை உள்ளது. அதை எப்படியாவது கைப்பற்று'' என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே தேவதைகள் நடனம் ஆடிக் கொண்டே வந்தனர்.

சிவப்பு சிறகுகள் கொண்ட அந்த தேவதை, ''இன்றாவது சொல். என்னைத் திருமணம் செய்து கொள் வாயா?'' என்று கேட்டுக் கொண்டே சந்தன் ராஜாவை நெருங்கியவள், அங்கு மற்றவர் கண்களுக்குத் தெரியாமல் மாயமாக மறைந்திருந்த சுந்தரி மேல் மோதிக் கொண்டு கீழே விழ, சுந்தரி அவள் மீது பாய்ந்து அந்த மாலையைக் கைப்பற்றிக் கொண்டாள்.

தேவதையைத் தொட்டதால், திடீரென சுந்தரி சுய உருவம் பெற்றதும், தேவதைகள் அவளைக் கண்டு பயந்து போய், மறைந்து விட்டனர்.

உடனே சுந்தரி அந்த மாலையை சந்தன் ராஜாவுக்கு அணிவித்து விட்டாள். மிகுந்த மகிழ்ச்சியுடன் சுந்தரியின் கைகளைப் பற்றிக் கொண்ட சந்தன் ராஜா, ''சுந்தரி என் உயிரைக் காப்பாற்றினாய். எனக்கு வாழ்க்கையை மீண்டும் கொடுத்து விட்டாய்'' என்று நன்றியறிதலுடன் கூறிவிட்டு ''வா, நாம் நமது நாட்டுக்குச் செல்வோம்'' என்று அவளை அழைத்துக் கொண்டு நாடு திரும்பினான்.

தன் மகன் உயிரோடு மீண்டதை எண்ணி அளவற்ற மகிழ்ச்சி அடைந்த அவன் பெற்றோர்கள், சுந்தரிக்குத் தங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்ததுடன் அவர்களுடைய திருமணத்தையும் சிறப்பாக நடத்தி வைத்தனர்.

திருமணம் முடிந்தபிறகு சந்தன் ராஜாவும் சுந்தரியும் மீண்டும் அதே காட்டுக்குத் திரும்பி வந்து தங்கள் ஆனந்த மயமான வாழ்க்கையைத் தொடங்கினர்.





# நீர்ப்பிசாசு

**பி**ரம்மதத்தன் காசியை ஆண்ட காலத்தில் போதிசத்வர் அவனது மகனாகப் பிறந்தார். அவருக்கு மகாசாசனர் என்ற பெயர் வைக்கப் பட்டது. அவரது தாயார் இன்னொரு ஆண் குழந்தையையும் பெற்றெடுத் தாள். அதற்கு சோமதத்தன் எனப் பெயரிட்டார்கள். அவர்களது தாயார் சில வருடங்களுக்குப் பின் திடீரென இறந்து விடவே மன்னன் இன்னொரு கல்யாணம் செய்து கொண்டான். அவளுக்கும் ஒரு ஆண் குழந்தை பிறக்க அதற்கு ஆதித்தன் எனப் பெயரிட்டனர்.

இளைய ராணியிடம் மன்னன் ஆதித்தனின் பிறந்தநாள் விழாவின் போது ''நீ என்ன கேட்டாலும் கொடுக்கிறேன்'' எனவே அவளும் ''நான் இப்போது எதுவும் கேட்க வில்லை. கொஞ்ச காலம் கழித்துக் கேட்கும் போது கொடுங்கள்'' என்றாள். அரசனும் அவ்வாறே வாக்களித்தான்.

ஆதித்தனும் கல்வி கற்று அரசர்குரிய போர்ப் பயிற்சி பெற்றுப் பெரியவன் ஆனான். அப்போது அவனது தாய் மன்னனிடம் போய் ''நீங்கள் ஆதித்தன் பிறந்தபோது நான் விரும்புவதை நிறைவேற்றுவதாகக் கூறினீர்கள். நானும் என் விருப்பத்தைப் பிறகு கூறுவதாகச் சொன்னேன். நீங்களும் சரி எனக் கூறினீர்கள். என் விருப்பத்தை இப்போது கூறுகிறேன். நிறை வேற்றுங்கள். என் மகனுக்கு இளவரசுப் பட்டம் கட்டுங்கள். உங்களுக்குப் பிறகு அவனே இந் நாட்டின் அரசனாவான்'' என்றாள். அது கேட்டு மன்னன் திடுக்கிட்டுத் திகைத்தான். தன் இளைய மனைவி யிடம் ''ஆதித்தனுக்கு இரண்டு அண்ணன்கள் இருக்கிறார்கள். அவர்களிலும் மூத்தவனுக்கு இளவரசுப் பட்டம் கொடுக்காமல் உன் மகனுக்குக் கொடுப்பது முறையல்ல'' என்றான்.

-ஜாதகக் கதை-

இளைய ராணியோ விடவில்லை. இப்படியே விட்டால் இளைய ராணி தன் முதல் மனைவிக்குப் பிறந்த இரு மகன்களுக்கும் ஏதாவது ஆபத்து விளைவித்து விடுவாளோ என எண்ணிய மன்னன் மகாசாசனரையும் சோமதத்தனையும் அழைத்து விஷயத்தைக் கூறி ''நீங்கள் இருவரும் இரண்டு மூன்று வருடங்கள் நாட்டின் பல பகுதிகளைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருங்கள். அதற்குள் உங்கள் சிற்றன்னையின் மனமும் மாறி விடும்'' என்றான்.

மகாசாசனரும் சோமதத்தனும் தந்தை சொன்னபடியே நடப்பதாகக் கூறி உடனே கிளம்பினார்கள். அவர்களோடு ஆதித்தனும் புறப் பட்டு விட்டான். அவர்கள் பல நாடுகளைக் கடந்து இமயமலைப் பகுதியை அடைந்தார்கள்.

ஒருநாள் அவர்கள் ஒரு மரத்தடியே உட்கார்ந்தனர். மகாசாசனர் சற்று தூரத்தில் ஒரு குளம் இருப்பது கண்டு ஆதித்தனிடம் ''தம்பீ! நீ அதோ தெரியும் குளத்திற்குப் போய் தாமரை இலைகளைப் பறித்து அவற்றில் நாங்கள் குடிக்க நீர் கொண்டு வா'' எனக் கூறி அனுப்பினார்.

ஆதித்தனும் அந்தக் குளத்தை அடைந்து அதில் இறங்கினான். அப்போது அதிலிருந்து நீர்ப்பிசாசு அவனைப் பிடித்துத் தன் வீட்டிற்குக் கொண்டு போய் விட்டது. வெகு நேரமாகியும் ஆதித்தன் வராததைக் கண்ட மகாசாசனர் தன் மற்ற தம்பியான சோமதத்தனிடம் ''தம்பி! நீ போய் ஆதித்தனைப் பார்த்து அழைத்து வா'' என்று சொல்லி அனுப்பினார்.



சோமதத்தனுக்கும் ஆதித்தனுக்கு நடந்தது போல் நடந்தது. தண்ணீர் கொண்டு வரப் போன இரு தம்பிகளும் திரும்பி வராதது கண்டு மகாசாசனர் அக்குளத்தை அடைந்து அதன் கரையில் நின்று குளத்தை உற்றுப் பார்க்கலானார்.

அப்போது நீர்ப்பிசாசு ஒரு மலை சாதியினன் போன்ற உருவில் அவர் முன் தோன்றி ''ஏன் நிற்கிறீர்கள்? குளத்தில் இறங்கி நீரை அள்ளிக் குடிப்பது தானே?'' என்றது. அதைக் கேட்டதுமே அதில் ஏதோ சூது இருப்பதைப் புரிந்து கொண்ட மகாசாசனர் ''ஓ! நீ தானா அவன்?'' என்றார்.

பிசாசும் ''நீர் மகா புத்திசாலி. நான்

புத்திசாலிகளை ஒன்றும் செய்ய மாட்டேன். அப்படிச் செய்யக் கூடாது என என் எஜமானன் குபேரன் கட்டளை இட்டிருக்கிறார்'' என்றது. மகாசானரும் ''ஓ! நீ அறிவுரைகளைக் கேட்க விரும்புகிறாயா! நான் சற்று இளைப்பாறி விட்டுக் கூறுகிறேன்'' என்றார்.

நீர்ப்பிசாசும் ''இது குபேரனின் குளம். இதனடியே என் உறைவிடம் உள்ளது. வாருங்கள்'' எனக் கூறி மகாசாசனரை தன் இருப்பிடத்திற்கு அழைத்துச் சென்றது. அவர் கூறிய அறிவுரைகளைக் கேட்டு மகிழ்ந்த நீர்ப்பிசாசு ''சரி. உங்கள் தம்பிகளில் ஒருவரை விடுதலை செய்கிறேன். யாரை உம்மோடு அழைத்துப் போக விரும்புகிறீர்கள்?'' என்று கேட்டது. மகாசாசனரும் ''ஆதித்தனைத் தான்'' என்றார். பிசாசும் ''ஓ! சோமதத்தனை ஏன் விடுவிக்காமல் ஆதித்தனைக் கேட்கிறீர்கள்?'' எனக் கேட்க மகாசாசனரும் ''நான் என் தாய்க்கு மிஞ்சும் ஒரு மகன். அது போல் என் சிற்றன்னைக்கும் ஒரு மகன் மிஞ்சட்டுமே என்று தான் ஆதித்தனை விடுதலை செய்யக் கேட்டேன். மேலும் ஆதித்தனை உன்னிடம் விட்டு சோமதத்தனோடு போனால் உலகத்தவர் நாங்கள் தாம் ஆதித்தனுக்கு ஏதோ தீங்கு விளை வித்து விட்டதாக எண்ணிக் கொள் வார்கள்'' என்றார்.

நீர்ப் பிசாசும் மகாசாசனரை வணங்கி ''ஆகா! எவ்வளவு உயந்த உள்ளம் படைத்தவர் நீங்கள்! உங்கள் தம்பி சோமதத்தனையும் ஆதித்தனோடு சேர்த்து விடுதலை செய்கிறேன்'' என்று அவர்களை விடுவித்து மூவருக்கும் விருந்து அளித்து தன் வீட்டில் கொஞ்ச நாட்கள் இருக்கச் செய்தது.

மகாசாசனர் மன்னரானார். அவர் சோமதத்தனைத் தன் பிரதிநிதி யாகவும் ஆதித்தனைத் தன் சேனாதி பதியாகவும் நியமித்தார். நீர்ப் பிசாசிற்கும் அவர் ஒரு மாளிகையைக் கொடுத்து அதற்கு வேண்டிய வசதிகளை எல்லாம் செய்து கொடுத்தார்.





# மகாவிஷ்ணு

சுக்ரீவன் கிஷ்கிந்தையின் மன்னனானான். வாலியின் மகன் அங்கதனுக்கு இளவரசுப் பட்டம் கட்டிய பின் அவன் இராமரைப் பற்றி மறந்து சுகபோகங்களில் ஈடுபட்டு விட்டான். இது கண்டு இலட்சுமணன் கோபம் கொண்டு வில்லை எடுத்து வரவே அனுமார் சுக்ரீவனுக்கு அவனது கடமையை உணர்த்தினார். சுக்ரீவனும் சீதையைத் தேட வானரர்களை அனுப்பினான்.

அங்கதன், அனுமார், ஜாம்பவான் ஆகியோர் தென் திசையில் சென்றனர். அப்போது இராமர் அனுமாரிடம் தன் மோதிரத்தைக் கொடுத்து சீதையிடம் கொடுத்து வரும்படிக் கூறினார்.

தென் கடலை அடைந்த வானரர்களுக்கு ''இராவணன் சீதையை எங்கே சிறை வைத்திருக்கிறான் என யோசித்துக் கொண்டு இருக்கையில் ஜடாயுவின் அண்ணனான சம்பாதி மெதுவாக நடந்து அவர்கள் இருந்த இடத்திற்கு வந்தான். அவனுக்கு இறக்கைகள் இல்லை.

ஒருமுறை சம்பாதியும் ஜடாயுவும் சூரியனை முதலில் தொட்டு விட்டு வருவது யார் எனப் பந்தயம் போட்டார்கள். அதில் சம்பாதி பறந்து சூரியனை அணுக முயன்று தன் இறக்கைகளை பொசுக்கிக் கொண்டான்.

வானரர்களிடமிருந்து சம்பாதி நடந்ததை எல்லாம் தெரிந்து கொண்டு அங்கதனை தன் தோளின் மீது அமரச் செய்து உயரமான இடத்தில் நின்று இலங்கையைக் காட்டினான். பல நூறு மைல்கள்



தூரத்தில் இலங்கை இருப்பதை அறிந்த வானரர்கள் மலைத்து நின்றார்கள்.

ஜாம்பவான் அனுமாருக்கு அவரது சக்தியை எடுத்துக் கூறி அவரை இராமரது வேலையில் ஈடுபடக் கூறினார்.

அனுமாரும் இராமரை தியானித்த வாறே ஆகாயத்தில் எம்பிக் கிளம்பிச் சென்றார். அவரது சக்தியைப் பரீட்சிக்க தேவர்கள் சரசாவை அனுப்பினார்கள். தேவ ஸ்திரீயான சரசா பயங்கர ராட்சசியாகி அனுமாரை எதிர்த்து நின்றாள். அனுமாரும் தன் உடலை அவளது உடலைப் போலப் பெரிதாக்கினார். சரசா மேலும் தன் உடலைப் பெரிதாக்கி விடவே அனுமாரும் தன் உடலை இன்னமும் பெரிதாக்கினார். சரசா மேலும் தன் உருவைப் பெரிதாக்கி வாயை திறந்து கொண்டு அனுமாரை விழுங்க வந்தாள். அனுமார் சட்டென மிகச் சிறிய உருவாகி அவள் வாயில் புகுந்து அவளது உடலை பிளந்தவாறே பின்புறமாக வெளியே வந்து விட்டார். சரசா தன் சுயரூபத்தை அடைந்து தேவலோகம் சென்றாள். அனுமாரை தேவர்கள் பாராட்டி னார்கள்.

அனுமார் தன் உருவைப் பெரிதாக்கிய சமயம் கடலில் இருந்த சிம்ஹிகை என்ற ஜலராட்சசி அவரது நிழலைப் பிடித்து அவரை அசை வற்றிருக்கச் செய்தாள். அனுமாரோ அவளை ஒரே குத்தால் கொன்று விட்டார். இவ்வாறு தன்னைத் தடை செய்தவர்களை எல்லாம் அடித்து ஒழித்தவாறே ஆகாய வழியே அனுமார் கடலை கடந்து சென்ற போது அவரது உடலிலிருந்து வியர்வைத் துளிகள் கடலில் விழ அவற்றை சுவர்ச்சலை என்ற மீன் வடிவில் இருந்த கடல் கன்னி விழுங்கி விட்டாள். அதனால் அவள் கர்ப்பமுற்று மத்சவல்லபன் என்ற மகனைப் பெற்றாள்.

ஒருமுறை இந்திரன் மலை களுக்குள் இருந்த இறக்கைகளை அறுத்துக் கொண்டே போனான். அப்போது இமவானின் மகனான மைநாகன் கடலிலுள் போய் ஒளிந்து கொண்டான். அவன் அனுமார் ஆகாய வழியே செல்வது கண்டு கடல் மட்டத்திற்கு வந்து ''அனுமாரே! சற்று என் மீது தங்கி

இளைப்பாறி விட்டுச் செல்லுங்கள்'' என வேண்டினான். அனுமாரும் அந்த வேண்டுகோளின்படி மைநாக மலை மீது சற்று இருந்து விட்டு மீண்டும் உயரக் கிளம்பி ஆகாய வழியே சென்று இலங்கையை அடைந்தார்.

இலங்கையைக் காப்பவள் இலங்கிணி என்ற தேவதை. அனுமார் இலங்கைக்குள் நுழைய முயல்வது கண்டு தன் ஈட்டியால் அவள் குத்த முயன்றாள். அனுமார் சட்டெனச் சிறிய உருவாகி தலைவாசல் வழியே நுழைந்தார். அவரை இலங்கிணி ஈயைப் பிடிப்பது போலத் தன் உள்ளங்கைக்குள் பிடித்தாள். அனுமார் அவளது கையைக் கடிக்கவே சட்டென அவள் பிடிப்பைத் தளர்த்தினாள். அனுமார் விடுபட்டதும் தன் கையை மடக்கி அவளது மார்பில் ஓங்கி ஒரு குத்து குத்தினார். அவள் மறு கணமே நினைவிழந்து கீழே விழுந்தாள்.

தன் நினைவு பெற்றதும் அவள் கண் விழித்து அனுமாரைப் பார்த்து ''நான் எப்போது இம்மாதிரி நினைவிழந்து விழுகிறேனோ அப்போது இலங்கைக்கு நாசகாலம் ஆரம்பமாகி விட்டது. இது நானாகச் சொல்வது அல்ல. முன்பு பிரம்ம தேவன் என்னிடம் கூறியது. இவ்வளவு நாள் இலங்கையின் காவல் தெய்வமாக நான் ஒரு சாபத்தால் இருந்தேன். எனக்கு சாப விமோசனம் ஏற்பட்டது. இனி நான் என் இருப்பிடம் செல்கிறேன். நீ



தாராளமாக இலங்கைக்குள் செல்'' எனக் கூறி அவள் ஒரு கந்தர்வப் பெண்ணாக மாறி மறைந்தாள்.

அனுமார் இலங்காபுரிக்குள் சென்றார். மாட மாளிகைகள் கொண்ட அந்த அழகிய நகரைக் கண்டு அவர் பிரமித்துப் போனார். அவர் சிறிய உருவிலேயே இலங்கை முழுவதும் திரிந்து சீதையைத் தேடிப் பார்த்தார். அசோகவனத்தில் அங்கு அவர் சீதையைக் கண்டார். சீதையைச் சுற்றிலும் ஆயுதங்களை வைத்துக் கொண்டு ராட்சசிகள் காவலாக நிற்பதை அவர் பார்த்து அங்கே அருகிலிருந்த ஒரு மரத்தின் மீது ஏறி உட்கார்ந்து இராமரின் திருநாமத்தை உச்சரிக்கலானார்.

அப்போது இராவணன் அட்ட காசமாக தேவ, நாக, யட்ச, ராட்சசப் பெண்கள் சூழ அங்கு வந்தான்.



அவன் சீதை இருந்த இடத்திற்கு வந்து ''ஏ சீதையே! இப்போதாவது நான் சொல்வதைக் கேள், அந்த இராமன் வந்து உன்னை விடுவித்துக் கொண்டு போகப் போவதில்லை'' என்றான்.

சீதையோ ஒரு புல்லைத் தூக்கி எறிந்து ''அடே, புல்லுக்குச் சமமான வனே! இதையெல்லாம் சொன்னால் என் மனம் மாறி விடுமா? நீயோ திருடன் இப்படிப் பட்டவனை தண்டிப்பது அரசரான இராமரின் கடமை. உனக்கு விரைவிலேயே முடிவு காலம் வரப்போகிறது'' என்றாள் அலட்சியமாக.

இராவணன் தன் வாளை உருவி ''உன்னைத் துண்டு துண்டாக வெட்டிப் போடுகிறேன் பார்'' என்றான். சீதையோ ''நீ ஒன்றும் அப்படிச் செய்யமாட்டாய். இந்த வீண் மிரட்டலில் நான் பயந்து உன் விருப்பப்படி நடக்க மாட்டேன். இராமரை எதிர்த்து வென்றா என்னை நீ சிறை பிடித்தாய்? பயந்தாங் கொள்ளியான நீ சன்னியாசி போல வந்து கபடமாக என்னைக் கவர்ந்து வந்தாய். இந்தத் திருட்டுத்தனத்திற்கு உனக்கு தண்டனை கிடைக்கத்தான் வேண்டும்'' என்றாள்.

அதைக் கேட்ட இராவணன் முணு முணுத்தவாறே அங்கிருந்து சென்றான். அனுமார் ராட்சசப் பெண்கள் இல்லாத நேரமாகப் பார்த்து மரத்திலிருந்து இறங்கி சீதையைக் கண்டு இராமரின் மோதிரத்தைக் கொடுத்தார். தனது விஸ்வரூபத்தை அவர் சீதா தேவிக்குக் காட்டித் தன் தோளின் மீது அவள் அமர்ந்து கொண்டால் இராமரிடம் கொண்டு போய்ச் சேர்த்து விடுவதாகக் கூறினார். சீதையோ ''இது சரியல்ல. இராமர் இராவணனைக் கொன்றே என்னை விடுவித்துக் கொண்டு போக வேண்டும். அதுவரை நான் கண்ணீர் வடித்தவாறே இந்த அசோக வனத்தில்தான் இருப்பேன் என்பதை நீ அவரிடம் போய் கூறு'' என தன் தலையிலிருந்த சூடாமணியை எடுத்து அனுமாரிடம் கொடுத்து அதனை இராமரிடம் சேர்ப்பிக்கு மாறு சொன்னாள். அதனை வாங்கி கொண்டு, தான் வந்தது இராவணனுக்குத் தெரியவேண்டும் என்பதற்காக அசோகவனத்து பூஞ் செடிகளையும் கொடிகளையும் அழிக்கலானார். தன்னைப் பிடிக்க வந்த ராட்சசர்களையெல்லாம்

அடித்துக் கொன்றார். இவ்வாறு பல ராட்சசர்கள்மடியவே இராவணன்தன் மூத்த மகனான இந்திரஜித்தை அனுப்பினான். அவன் விட்ட பிரம்மாஸ்திரத்திற்கு மரியாதை செலுத்த வேண்டும் என்பதற்காக அனுமார்கட்டுண்டார். இராவணனை நேரில் கண்டு அறிவுரை கூறவும் அவர் விரும்பினார்.

இராவணனின் தர்பாரை அவர் அடைந்த போது அவன் சிம்மா சனத்தில் அமர்ந்து தாழ்ந்து அனுமாரைப் பார்த்துப் பரிகாசம் செய்வது போல ஒரு சிரிப்பு சிரித்தான். அனுமார் ஒரு முறை மூச்சை அடக்கி வெளி விட்டார். அப்போது அவரைக் கட்டி இருந்த கட்டுகள் அறுந்தன. தன் வாலை அவர் நீட்டி வளையமாகச் சுருட்டிய வாறே இராவணனின் சிம்மாசனத் திற்கும் உயரமாகச் செய்து அதன் மீது அமர்ந்து இராவணனைத் தாழ்ந்து பார்த்தார்.

இராவணன் அது கண்டு திகைக்கையில் அனுமார் ''ராட்சச மன்னனே! இராவணா!! நான் இராம தூதன். இராமரால் இலங்கையை முற்றுகையிட்டு வென்று விட முடியும். அதனால் நீ மிகுந்த பலசாலி என்று கர்வப்பட்டுக் கொண்டிராதே. நான் சொல்வதைக் கேள். மரியாதை யாகச் சீதையை இராமரிடம் ஒப்படைத்து விட்டு அவரிடம் மன்னிப்புக் கேள்'' என்றார்.

இராவணனோ கோபத்தோடு அனுமாரைக் கொல்லத் தன் வாளை



எடுத்துக் கொண்டான். அப்போது விபீஷணன் குறுக்கிட்டு ''தூதனாக வந்தவனைக் கொல்லக் கூடாது. ஏதாவது அங்கஹீனம் செய்து அனுப்பு'' என்றான். இராவணனும் ''குரங்குகளுக்குத் தம் வால் என்றால் உயிர். அதனால் அந்த வாலில் துணி சுற்றி எண்ணெய் விட்டு எரித்துப் பொசுக்குங்கள்'' என்றான்.

ராட்சச வீரர்களும் அவ்வாறே செய்தனர். அனுமாரோ ஒரு குதி குதித்து ஆகாயத்தில் உயரக் கிளம்பினார். அவர் தம் வாலைச் சுழற்றியவாறே இலங்கா புரியின் மாளிகைகளுக்குத் தீ வைத்தார். பல மாளிகைகள் எரிந்தன. இலங்கை சாம்பல் மயமாகி விட்டது. விபீஷணனின் மாளிகை மட்டும் தீக்கு இரையாகவில்லை.

அனுமார் மீண்டும் அசோகவனத் திற்குப் போய் சீதையைக் கண்டார். அவளிடம் விடை பெற்றுக் கொண்டு அவர் ஆகாய மார்க்கமாகக் கிளம்பி கடலைக் கடந்தார். பின்னர் மற்ற வானரர்களுடன் அவர் கிஷ்கிந்தைக்கு வந்து இராமரிடம் சீதை கொடுத்த சூடாமணியைத் தந்தார்.

அதைப் பெற்றுக் கொண்ட இராமர் சீதையை நேரில் கண்டது போலவே மகிழ்ந்து போனார். அவர் அனுமாரைக் கட்டித் தழுவி கொண்டு அவரது வீர செயல்களைப் பாராட்டினார். பின்னர் அவர் தன் வில்லை எடுத்துக் கொண்டு இராவணனைக் கொல்வதாகச் சபதம் செய்தார்.

இராவணனின் தம்பி விபீஷணன். இராமரோடு விரோதம் வேண்டாம் என்றும் சீதையை இராமரிடம் ஒப்படைத்து இலங்கையைக் காப்பாற்றுமாறும் இராவணனிடம் வேண்டினான். இராவணனோ'' என் பலத்தால் இராமனை வெல்ல முடியும். நீ இப்படிச் சொல்லி எனக்கு துரோகம் செய்கிறாய். அதனால் நீ உடனே இலங்கையை விட்டு போய் விடு. என் கண் முன் தென்படாதே'' என்று கோபத்தோடு கூறினான்.

வீபீஷணனும் தன் ஆட்களுடன் இலங்கையை விட்டு அகன்றான்.



# அரைகுறை வைத்தியன்

ஏலகிரி என்ற ஊரில் கோபி என்பவன் இரு பசுமாடுகளையும் இரு எருமை மாடுகளையும் வைத்துப் பால் வியாபாரம் செய்து வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தான். ஒருமுறை அவனுடைய பசுக்களில் ஒன்று நோய் வாய்ப்பட்டது.

உடனே கோபி பக்கத்து ஊரிலுள்ள கலியன் என்ற பால்காரனிடம் இதைப்பற்றி ஆலோசனை கேட்டான். கலியனுக்கு மிருக வைத்தியம் அரைகுறையாகத் தெரியும். அவன் கோபியிடம், ''கோபி, நீ சொல்வதைப் பார்த்தால், உன்னுடைய பசு சரிவர தீவனம் உண்பதில்லை, கழுநீர் குடிப்பதில்லை என்று தெரிகிறது. உன் பசுவுக்கு என்ன நோய் என்று புரிந்து விட்டது'' என்றவன் தொடர்ந்து ''ஒருமுறை என் பசுவும் இவ்வாறு நோய் வாய்ப்பட்டது. நான் எனக்குத் தெரிந்த வைத்தியப்படி கழுநீரில் வேப்பிலையை அரைத்துக் கலக்கி, கடுக்காய் கொஞ்சம் சேர்த்து, பாகற்காய் சாறு கலந்து ஒரு சொம்பு என் பசுவை குடிக்கச் செய்தேன். அவ்வளவுதான், கொஞ்ச நாட்களிலேயே...'' என்று கலியன் சொல்லி முடிப்பதற்குள் கோபி துள்ளிக் குதித்து ''உன்னுடைய வைத்தியம் எனக்குப் புரிந்து விட்டது. நான் வருகிறேன்'' என்று உடனே விரைவாகக் கிளம்பிச் சென்று விட்டான்.

இரண்டு நாட்கள் கழித்து, கோபி பதற்றத்துடன் கலியனை அணுகி, ''நீ சொன்ன மாதிரியே வைத்தியம் செய்தேன். ஆனால் என் பசு இறந்து விட்டது'' என்று கூற, கலியன், '' என்னுடைய பசுவும் இறந்து விட்டது. இதைத்தான் நான் அன்று உனக்கு சொல்ல நினைத்தேன். இப்படி ஏதும் செய்யாமல், நல்ல வைத்தியராகப் பார் என்று சொல்ல வருவதற்குள், நீ அவசரப்பட்டுக் கிளம்பிவிட்டாய்'' என்றான்.

**-விஜயலட்சுமி**





# தந்தையின் அன்பு

ஒரு கிராமத்தில் குமரன் என்ற ஒரு விவசாயி இருந்தான். அவனுக்கு மோகன் என்று ஒரேயொரு மகன் இருந்தான். மோகன் சிறுவயதில் இருந்தே சோம்பேறியாகவும், போக்கிரியாகவும் இருந்தான். தன்னுடைய பெற்றோர்களுக்கு அவன் எந்த உதவியும் செய்ததில்லை. பள்ளிப் படிப்பிலும் அவன் கவனம் செல்லாததால், சில ஆண்டுகளில் பள்ளிக்குச் செல்வதையே நிறுத்தி விட்டான். வீணே ஊர் சுற்றி வந்து பொழுதை வீணாக்கிக் கொண்டிருந்த மோகனைக் குறித்து குமரன் பெரும் கவலையில் ஆழ்ந்தான்.

மோகன் வாலிபனாகியும் திருந்த வில்லை. அவனுக்குத் திருமணம் செய்து வைத்தால் தன்னால் பொறுப்பு உண்டாகிவிடும் என்று கருதிய குமரன், ஒரு நல்ல குடும்பத்துப் பெண்ணை அவனுக்கு மணம் செய்து வைத்தான். ஆனால் திருமணம் நடந்தவுடனே மோகன் தன் தந்தையிடம் ''அப்பா, எனக்கு சேர வேண்டிய சொத்தை பிரித்துக் கொடுத்து விடுங்கள்'' என்றதும் குமரன் அதிர்ச்சி அடைந்தான்.

தன் மகனை நோக்கி ''மகனே, உனக்கு என்னுடன் சேர்ந்திருப்பதில் என்ன நஷ்டம்? ஏன் தனிக் குடித்தனம் அமைக்க விரும்புகிறாய்? உனக்கு எந்த வேலையும் தனியாக செய்யத் தெரியாது. என்னைப் பிரிந்து தனியாகச் சென்றால் மிகவும் துன்பப் படுவாய். நீயும் உன் மனைவியும் என்னுடனேயே சேர்ந்திருங்கள் உன்னை விட்டால் எனக்கு வேறு யாருமில்லை'' என்று கண்களில் கண்ணீர் மல்க கூறினான்.

''அப்பா பாசம், அன்பு என்று ஏன் நாடகம் போடுகிறீர்கள்? உங்களுக்கு என் மேல் துளி கூட பாசம் கிடையாது. நினைவு தெரிந்த நாள் முதலாய் என்னைத் திட்டி அடித்து உதைத்து இருக்கிறீர்கள். இனியும் உங்களிடம் இருந்து துன்பப்படாமல் நான் சுதந்திரமாக இருக்க ஆசைப் படுகிறேன்'' என்று இரக்கமின்றிக் கூறினான். நஞ்சினும் கொடிய மோகனது வார்த்தைகளைக் கேட்டு

- 25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை -

குமரன் இதயம் உடைந்து சுக்கு நூறாகியது. குமரன் அரை மனதுடன் தன் பிள்ளைக்கு சொத்தில் பாகம் பிரித்துக் கொடுத்துவிட மோகன் தன் மனைவியுடன் பக்கத்து கிராமத் திற்குச் சென்று விட்டான். அங்கு ஏதோ கூலி வேலை செய்து கொண்டு தனியே வாழ ஆரம்பித்தான்.

இவ்வாறு ஒரு ஆண்டு கழிந்தது. மோகனுக்கு ஒரு மகன் பிறந்தான். மோகனுடைய மகனும் சிறு வயதில் இருந்தே மோகனைப் போல் சோம் பேறியாகவும் போக்கிரியாகவும் காலம் கழிக்கத் தொடங்கினான். தன் மகனுடைய போக்கைக் கண்டு மோகனுக்கு மிகுந்த வருத்தமும், கோபமும் உண்டாகியது. தன் பிள்ளையைத் திருத்துவதற்காக மோகன் அவனைக் கடும் வார்த்தை களால் சாடி அடிக்கவும் செய்தான். ஒருநாள் மோகன் கோபத்தில் பலமாக அடித்ததன் விளைவாக, மோகனின் மகன் வீட்டை விட்டு ஓடி தன் தாத்தாவை அடைந்தான். அவரிடம் தன் தந்தையான மோகனைப் பற்றி புகார் செய்தான்.

உடனே குமரன் தன்னுடைய பேரனை அதே கிராமத்தில் இருந்த தன் நண்பரிடம் விட்டு வைத்தார். இதற்குள் வீட்டை விட்டு ஓடிய தன் பிள்ளையைக் குறித்து மோகன் பெருங்கவலையில் ஆழ்ந்தான். தன்னுடைய கிராமத்திலும், சுற்று வட்டாரத்திலும் தீவிரமாகத் தன் பிள்ளையைத் தேடியலைந்தான். இறுதியில் தன் தந்தையிடம் வந்து சேர்ந்து, ''என் மகன் பொறுப் பில்லாமல் சுற்றித் திரிந்தான். அதற்காக அவனைக் கடிந்து கொண்டு அடித்தேன். உடனே வீட்டை விட்டு ஓடி விட்டான்'' என்றான். ''போனால் போகட்டும் விடு. பயனற்ற பிள்ளை



இருந்தால் என்ன, ஓடினால் என்ன! இதைப் பற்றி நீ கொஞ்சமும் கவலைப் படாதே'' என்று போலியாக குமரன் ஆறுதல் கூறினான்.

வருத்தத்துடன் வீடு திரும்பிய மோகனை நோக்கி அவன் மனைவி கதறி அழுது கொண்டே ''என் பிள்ளையை அடித்து வீட்டை விட்டுத் துரத்தி விட்டீர்களே! அவனை இப்போது எங்கும் காண வில்லையே'' என்று கேவினாள்.

தன் மனைவியின் கதறலைக் கேட்டவுடன் மோகனுக்குத் துயரம் பன் மடங்கு அதிகரித்தது. அதை வெளிக் காட்ட முடியாமல் அடக்கி வைத்ததால், மோகனின் உடல் நலம் கெட்டது.

தன் மகனை சோதனைக் குள்ளாக்கியது போதும் என்று கருதிய குமரன், தன் பேரனை அழைத்துக் கொண்டு மோகனிடம் சென்றான். காணாமல் போயிருந்த தன் பிள்ளையைக் கண்ட மாத்திரத்தில் 'கோ' வென்று கதறிக் கொண்டே அவனைக் கட்டித் தழுவிக் கொண்ட மோகனைப் பார்த்து குமரன் ஆறுதல் கூறினார். ''மகனே, தந்தையின் அன்பு எத்தகையது என்பதை இப்போதாவது உணர்ந்தாயா? உன் மகனைத் திருத்த வேண்டும் என்ற நல்ல எண்ணத் துடன் தான் நீ அவனை அடித்தாய். அதனால் உனக்கு அவன் மீது அன்பில்லை என்று பொருள் இல்லை. நானும் அவ்வாறே உன்னிடம் பல நேரங்களில் கடுமை யாக நடந்து கொண்டது உன்னை திருத்துவதற்காகத்தான். நீ அதைப் புரிந்து கொள்ளாமல் உன்மீது எனக்குப் பாசம் இல்லை என்று தவறாக எண்ணிக் கொண்டு என்னை விட்டுப் பிரிந்தாய். உன்னைப் பிரிந்ததில் எனக்கும் எவ்வளவு துயரம் உண்டாகியிருக்கும் என்பது இப்போது தெரிகிறதா?'' என்றார்.

மனம் திருந்திய மோகன் மறுநாளே தன் குடும்பத்துடன் தன் தந்தையின் வீடு திரும்பி, அவருடன் சேர்ந்து வசிக்கலானான்.

விவசாயத்தில் தன் தந்தைக்கு நின்று உதவிகள் செய்து வாழ் நாட்களை மிகவும் இனிமையாகக் கழிக்கலானான்.



# சூர்யா

## வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

18

சூர்யாவை ஜெயானந்த முனிவரின் பாதுகாப்பில் ஒப்படைத்து விட்டோம் என்ற நிம்மதியுடன் மன்னர் சாந்திதேவர் உயிர் துறந்தார். புரட்சிக் காரர்கள் காட்டில் நடமாடுவதைத் தெரிந்து கொண்டு, வேட்டையாடுவது போல் பாசாங்கு செய்து வீரசிம்மன் காட்டை முற்றுகையிடுகிறான். ஜெயானந்த முனிவர் அவர்களை தடுத்ததன் விளைவாக வீரசிம்மன் தன் முயற்சியை கை விடுகிறான். ஜெயானந்தர் ஒரு முக்கியமான காரியமாக சுகதேவரை சந்திக்கிறார்.

ஓவியம் : காந்தி அய்யா




















மாற்றுடை தரித்து சுகதேவர் கிளம்புகிறார்
எச்சரிக்கையாக இருப்பேன்
நான் அந்த இடத்திற்குச் செல்கிறேன்
அந்த விக்கிரகம் அம்மனுடையது போல் தோன்றுகிறது. உள்ளே ஆழ அழுந்தியுள்ளது
சுகதேவர் மிகவும் பக்தியுடன் அந்த விக்கிரகத்தை அணுகுகிறார்.
உடைந்து விடுமோ என்று பயமாக உள்ளது
சுவாமி, இதை வெளியே எடுக்க முடியவில்லை
அதோ, முனிவர் வருகிறார். அவரைக் கேட்போம்.
ஜெயானந்தர் தன் சீடர்களுடன் வருகிறார்.
முனிவரே, முழு விக்கிரகத்தையும் வெளியே எடுப்பது கடினமாக உள்ளது.
ஜெயானந்தர் அந்த விக்கிரகத்தை உற்று நோக்குகிறார்.
இதே விக்கிரகத்தைத் தான் என் ஞான திருஷ்டியில் பார்த்தேன். இது கனக துர்கா தேவி.
ஒருவனால்தான் இதை வெளியே எடுக்க முடியும். இந்தக் கோயில் அவர்கள் குலத்தைச் சேர்ந்ததுதான்.
கோவிந்தா, சூர்யாவை அழைத்து வா
நாம் ஒரு சிறிய கோயில் அமைத்து, அங்கே தேவியை வைப்போம். அதுவரையில் தேவி பாதுகாப்பான இடத்தில் இருக்க வேண்டும்.
நீங்கள் அனுமதித்தால் தேவியை என் மாளிகையில் வைத்துக் கொள்கிறேன், முனிவரே!
வழிகாட்டி கோவிந்தனுடன் சூர்யா வருவதை அவர்கள் பார்க்கின்றனர்.
எத்தனை அழகாக இருக்கிறான். பலசாலியாகவும் தோன்றுகிறான்.


பல மாதங்களுக்குப் பிறகு ராஜகுமாரனைப் பார்க்கிறேன்.
எதிர்காலத்தில் புகழுடன் விளங்குவான்.
முனிவரே, என்னை எதற்காக அழைத்தீர்கள்?
அதோ பார்! அந்த விக்கிரகம் ஆழமாக மண்ணில் பதிந்துள்ளது. அதை வெளியே எடுக்க முயற்சி செய்வாயா?
சூர்யா தன் கைகளால் விக்கிரகத்தை அழுத்திப் பிடித்துக் கொண்டு பலமாக ஆட்டி இழுக்கிறான்.
சுகதேவர் பணிவுடன் அந்த விக்கிரகத்தைப் பெற்றுக் கொள்ள மேலங்கியை விரிக்கிறார்.
சூர்யா, இதை சுகதேவரிடம் கொடுத்து விடு. அவர் இதை பத்திரமாகப் பாதுகாப்பார்.
விக்கிரகம் மிக எளிதாக வெளியே வந்து விடுகிறது. அனைவரும் மகிழ்ச்சி அடைகின்றனர்.
ஜெய துர்காதேவி!
ஜெய துர்கா தேவி!


சுகதேவரே, கோவிந்தன் உங்களுடன் செல்வார்.
தோண்டும் போது இன்னும் ஏதாவது கிடைத்தால் சொல்லியனுப்புங்கள்.
மகாதேவா, தொடர்ந்து தோண்டு.
வேலை முடிந்ததும், நான் உங்களுக்குச் சொல்கிறேன்.
ஜெயானந்தரும், சூர்யாவும் ஆசிரமத்தை அடைகின்றனர்.
சாந்திபுரத்தில்...
காட்டில் புரட்சிக்காரர்கள் யாருமே கிடைக்க வில்லையா?
ஆம். அவர்கள் நமது ராஜ்யத்தை விட்டுச் சென்று விட்டனர். என்னுடைய ஒற்றர்களுடைய தகவலின்படி...
ஒரு தங்க விக்கிரகம் கிடைத்துள்ளது.
என்ன சொன்னாய்? தங்க விக்கிரகமா?
தேவியின் விக்கிரகம்
தேவியோ, தேவனோ! தங்க விக்கிரகமானால் அது நம் வசம் இருக்க வேண்டும்.
இப்போது அது எங்கே இருக்கிறது?
ஜெயநகர் காவல் தலைவனிடம் உள்ளது எனத் தெரிய வந்துள்ளது.
சுகதேவனிடமா? அதை உடனே நமக்குத் தந்து விடும்படி அவனுக்குச் செய்தி அனுப்பு.
இன்றே செய்தி அனுப்பி விடுகிறேன்.
தொடரும்.

## DON'T WAIT FOR HIS/HER BIRTHDAY!

# HERE'S AN IDEAL GIFT FOR ALL OCCASIONS

## FOR YOUR DEAR ONES!

### HERE ARE EDUTAINMENT PRODUCTS FROM THE HOUSE OF CHANDAMAMA

FUN WORK SHOP






With a simple click and drag movement of the mouse, Chandamama Fun Workshop promises hours of fun.

RS. 199/- ONLY




We have over a half-million words in English to communicate with, but half of everything we write and read depends on 300 most frequently used words. But many of these words cannot be sounded out, so they must be learned as sight words. What exactly are "sight words?" - the, a, is, of, to, in, and, I, you - are just a few. Words that good readers instantly recognise.

JATAKA TALES - Early Reader Series (Level 2) teaches children to instantly recognise 100 of these sight words.

RS. 199/- ONLY

JATAKA TALES

LEVEL II



TRAPPED




The renowned indologist Professor Purenuthin is trapped inside the Mound of Murukki. You search through 12 different games and activities to find clues and keys to save the professor.

RS. 199/- ONLY



*For more details, Contact :*
**Mr. Shivaji, Chandamama India Limited, 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai 600 097. INDIA. Ph: +91-44-22313637 / 22347399.**
**e-mail : support@chandamama.org WWW : http://www.chandamama.org**

HURRY!

## உங்கள் விஞ்ஞானம்

### உப்பில்லாப் பண்டம் குப்பையிலே



சமையலில் பயன்படுத்தப் படுவது என்னமோ ஒரு துளி உப்புதான். ஆனால் அது சுவையில் எத்தகைய மாற்றத்தை உண்டாக்கி விடுகிறது? உப்பில்லாப் பண்டத்தை ஒரு கவளம் கூட நமது நாக்கு ஏற்க மறுக்கிறது. உப்புக்கு உணவுப் பண்டங்களைக் கெடாமல் வைத்திருக்கும் ஆற்றலும் உண்டு.

இனிப்பும், உவர்ப்பும் இரண்டு மிக முக்கியமான சுவைகள். முதன்முதலில் உப்பு தயாரித்தது சீனர்கள் தான். கடலிலிருந்து கிடைக்கும் உப்பு, மலைப் பாறைகளிலிருந்து எடுக்கும் உப்பில் இருந்து சுவையிலும் குணத்திலும் மாறு பட்டிருக்கும்.

நமது உடலில் 4 அவுன்ஸ் வரை உப்பு உள்ளது. உடலில் போதிய அளவு உப்பு இல்லையெனில் நமது தசைகள் இயங்காது. நாம் உண்ணும் உணவு சீரணிக்காது. அவ்வளவு ஏன், இதயமே துடிக்காது. நமது உடலுக்கு எவ்வளவு உப்பு தேவை என்பதை திட்டவட்டமாக இன்னும் விஞ்ஞானிகளால் நிர்ணயிக்க முடியவில்லை. இந்நிலையில், நாம் உப்பை மிகக் குறைவாகவோ அல்லது மிக அதிகமாகவோ உணவில் சேர்க்கக் கூடாது.

## உங்கள் சுற்றுப்புறம்

### காலை உணவு

நாம் பல்வேறு நேரங்களில் உண்ணும் உணவுகளில் காலை உணவு மிக முக்கியமானது. உடற்கூறு விஞ்ஞானி களின் கருத்துப்படி காலை உணவு மட்டுமே வயிறார சாப்பிட வேண்டும். அப்படிப்பட்ட காலை உணவு இயற்கையான உணவுப் பொருட்களாக அமைந்தால் மிகச் சிறப்பாயிருக்கும். காலை உணவாக உட்கொள்ளும் பொருட்களான ரொட்டி, வெண்ணெய், பால் போன்றவைகளை எடுத்துக் கொள்ளுங்கள். இவற்றைப் போலவே சுவையுள்ள பொருட்கள் சில இயற்கையிலேயே கிடைக்கின்றன.

தெற்கு ஆசியாவிலுள்ள 'பிரெட் ட்ரீ' என்னும் மரம் ரொட்டித்துண்டுகளைப் போன்ற சுவையுடைய பழங்களைத் தருகின்றன. அந்தப் பழங்களில் ஸ்டார்ச் சத்து நிரம்பியுள்ளது. ஆப்பிரிக்காவில் 'பட்டர் ட்ரீ' என்னும் மரத்தின் பழ விதைகளை அரைத்து வேக வைத்தால், வெண்ணெய் போன்ற சுவையுள்ள ஒரு பொருள் உண்டாகிறது. வெனிசூலா விலுள்ள 'மில்க் ட்ரீ' என்னும் மரத்தின் சாறு பால் பேன்று சுவை உள்ளது.



# உங்கள் பக்கங்கள்  உங்கள் பக்கங்கள்

## உங்களுக்குத் தெரியுமா?

### கையெழுத்திலிருந்தே கண்டு பிடிக்க முடியும்

ஒருவருடைய கையெழுத்தைக் கொண்டு அவருடைய குணாதிசயங்களை மதிப்பிட முடியும் என்பது ‘கிராஃபாலஜி’ கலையின் மூலம் சாத்தியம் என்று கருதப்படுகிறது. இக்கலையைக் கற்றவர்கள் ஒருவரது கையெழுத்து எவ்வளவு அழுத்தமாக தாளில் எழுதப்படுகிறது என்பதைக் கொண்டும், எழுத்துகள் சாய்வாகவோ, கோணலாகவோ, நேர்



வரிசையில் உள்ளனவா என்பதைக் கொண்டும், அவற்றின் அளவைக் கொண்டும், ஒருவரது இயல்புகளைக் கண்டு பிடிக்கின்றனர். உதாரணமாக, பெரிய எழுத்துகளாக எழுதுபவர்கள் தன்னம்பிக்கை உள்ளவர்களாகவும், சகஜமாகப் பழகுபவர்களாகவும் இருப்பார்களாம். நடுத்தர அளவுள்ள எழுத்துகளாக எழுதுபவர்கள் சுயக்கட்டுப்பாடு உள்ளவர்களாகவும், சிறிய எழுத்துகளாக எழுதுபவர்கள் மனக் குழப்பம் உள்ளவர்களாகவும் இருப்பார்களாம்.

## நம் இந்தியா

**நம் நாட்டில் பல மதங்களைப் பின்பற்றுபவர்கள் உள்ளனர். இந்த மாதப் புதிர் அந்த மதங்களைப் பற்றியது.**

1. இந்தியாவில் புத்தர்களுடைய மிகப் புனிதமான தலமாகக் கருதப்படுவது எது?



2. சோராஸ்டிரிய மதத்தினர் தங்கள் இறைவனை வணங்கும் இடத்தை எப்படி அழைக்கின்றனர்?

3. ‘கால்சா பந்த்’ என்ற இயக்கத்தை எந்த சீக்கிய மதகுரு தோற்றுவித்தார்?



4. சமண மதத்தின் இரண்டு உட்பிரிவுகள் யாவை?



5. முஸ்லிம் மதத்தினரின் பஞ்சாங்கத்தின் படி அவர்களது முதல் ஆண்டு எப்போது தொடங்கியது?

(விடைகள் 70ம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி

**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



NARAYANAMURTY TATA



NARAYANA MURTY TATA

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு மார்ச் 2005 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

பரிசு பெற்றவை

வாழ்த்துகள்!

**நவம்பர் 2004 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :**

**ஆர். குப்புசாமி**
**எண் 6/25, இரட்டைமலை,**
**சீனுவாசன் தெரு,**
**நாகல்கேணி, குரோம்பேட்டை,**
**சென்னை-600 044.**





''ஓடா வண்டியில் ஆய்வு''
''ஓட்டும் வண்டியில் ஓய்வு''

## நம் இந்தியா - விடைகள் (பக்கம் 69)

1. சார்நாத்.
2. அஞ்சுமன் (நெருப்புக் கோயில்).
3. கோவிந்த் சிங் (பத்தாவது குரு).
4. திகம்பரர்கள், சுவேதாம்பரர்கள்.
5. கி.பி.622.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)

AMBULIMAMA (Tamil) January 2005 Regd No. TN/PMG(CCR)-592/03-05
Regd. with Registrar of Newspaper for India No. 1095/57
Licensed to post without prepayment No. 377/03-05 Foreign - WPP No. 378/03-05



# சுத்தமான காற்றை சுவாசிப்போம்



வீணாவின் வகுப்புத் தோழியான சித்ரா இரண்டாம் நாளாக அன்றும் வகுப்புக்கு வரவில்லை. சித்ராவின் வீட்டுக்கு தொலைபேசியில் தொடர்பு கொண்டபோது அவள் வீட்டு வேலைக் காரி சித்ராவுக்கு உடல் நலம் சரியில்லை என்று கூறினாள். ஆகையால் வீணா அவளை சந்திக்க அவள் வீட்டுக்குச் சென்றாள். படுத்த படுக்கையாக இருந்த சித்ராவைக் கண்டு அதிர்ச்சியுற்ற வீணா அவள் தாயிடம், ''என்ன ஆயிற்று சித்ராவுக்கு?'' என்று வினவினாள்.

''அவளுக்கு புராங்கைடிஸ்'' என்ற சித்ராவின் அம்மா, ''வாகனங்களில் இருந்தும் தொழிற்சாலைகளிலிருந்தும் வெளிவரும் அசுத்தக் காற்று, காற்று மண்டலத்தையே மாசுபடுத்தி விட்டன. அப்படிப்பட்ட காற்றை சுவாசித்ததால் தான் அவளுக்கு அந்த நோய் ஏற்பட்டது'' என்று விளக்கினாள். மறுநாள் வகுப்பறையில் தன் ஆசிரியையிடம் சித்ராவின் நிலைமையை வீணா எடுத்துரைத்தாள். அதைக் கேட்ட ஆசிரியை ''கடவுள் நமக்கு அளித்துள்ள விலை மதிப்பற்ற சுத்தமான காற்றை நாம் இவ்வாறு அசுத்தமாக்கு கிறோம். அதன் விளைவுதான் சித்ரா நோய்வாய்ப்படக் காரணம்'' என்றாள்.

''காற்று மாசுபடுவதை எவ்வாறு தடுக்கலாம் டீச்சர்?'' என்று ஒரு மாணவி கேட்டாள். ''நீங்களே இதற்கு பதில் சொல்லுங்களேன்'' என்று ஆசிரியை கூற பல மாணவ மாணவிகள்;

''நாம் பெட்ரோல் வாகனங்களைத் தவிர்த்து சைக்கிளில் பள்ளிக்கு வர வேண்டும்.''

''இதைப் பற்றிய விழிப்புணர்வை பெரியோர்களிடத்திலும் ஏற்படுத்த வேண்டும்'' என பதில்கள் கூற ஆசிரியை, ''நிறைய மரங்களை நட வேண்டும். ஏனென்றால் மாசுபட்ட காற்றை சுத்தமாக்கும் சக்தி மரங்களுக்கு உள்ளது'' என்றாள். ''அப்படியே செய்வோம்'' என்றனர் மாணவர்கள்.